# தெற்கு ஜன்னலும் நானும்

**வயலூர் சண்முகம்**




16/4, கேசவப்பெருமாள் சன்னதித்தெரு,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
தொலைபேசி : 9884002996

# தெற்கு ஜன்னலும் நானும்

ஆசிரியர்
வயலூர் சண்முகம்

●

முதல் பதிப்பு - 2004

●

வெளியீடு :

முற்றம்
16/4, கேசவப்பெருமாள் சன்னதித்தெரு,
மயிலாப்பூர், சென்னை - 600 004

●

அட்டை வடிவமைப்பு :
மு. கலைவாணன்
மு.க. பகலவன்

●

ஒளி அச்சு
கலை கணினி வரையகம்
சென்னை - 17

●

அச்சு :
பதிப்பக நண்பன்
சென்னை - 5

●

பக்கம் : 112

விலை : ரூ.35/-

# பதிப்புரை

வாழும்போதே வரலாறு ஆகிறது சிலருடைய படைப்பு. வரலாற்றில் இருட்டடிப்பு செய்யப்படுகிறது சிலரது படைப்பு. வெளியே தெரியாத வேர்களாகவே புதைந்து கிடக்கிறது பல முகமறியா எழுத்தாளர்களின் எழுத்து. இதில் கடைசி வகையானதுதான் கவிஞர் வயலூர் சண்முகத்தின் எழுத்துக்கள்.

காலமான ஒரு கவிஞருடைய, காலம் மீறிய கவிதைகளை, காலம் கடந்தேனும் நூலாக்க கிடைத்த வாய்ப்புக்காக மகிழ்ச்சியடைகிறேன்.

விமர்சகர் இந்திரன், சுவாமி ஜீவன் ப்ரமோத் இருவரும் வயலூர் சண்முகம் அவர்களைப் பற்றி எழுதியிருப்பதைப் படிக்கும்போது இப்படிப்பட்ட,ஒரு படைப்பாளி, தான் வாழும் காலத்தில் வெளியே தெரியவில்லையே என்ற ஆதங்கம் நமக்கு ஏற்படுகிறது.

'என்னைவிட ஆற்றல் உள்ளவர் வயலூர் சண்முகம். தமிழகத்தில் இப்படிப்பட்ட ஒரு புது வீச்சு உள்ள கவிஞன் கிடையாது அன்னைக்கு!' என்று வயலூர் சண்முகம் அவர்களைப் பற்றி உவமைக் கவிஞர் சுரதா சொல்லியதாக நண்பர் மானா பாஸ்கரன் சொல்லக் கேட்டதை எண்ணும்போது காலம் கடந்தேனும் அந்தக் கவிஞனின் கருத்துப் பெட்டகம் நூலாக வருகிறதே என்று பெருமிதம் என்னுள் எழுகிறது.

**நாதன்**

அணிந்துரை

# மௌனத்தின் குரலோசை

கலை - இலக்கிய விமர்சகர் **இந்திரன்**

வயலூர் சண்முகம் இன்று இருந்திருந்தால் அவருக்கு வயது எண்பத்து ஒன்று இருக்கும்.

இருபத்தி இரண்டு ஆண்டுகளுக்கு முன்னரே நம்மிடையே இருந்து பிரிந்து விட்ட அவருக்குள், உயிர்த்துடிப்புடன் வாழ்ந்த உலகங்கள், மொழி எனும் கண்ணாடிப் பெட்டிக்குள் வைத்து பாதுகாக்கப்பட்டு, நம்மிடையே இன்று ஒப்படைக்கப் பட்டுள்ளன.

புதுமை வீச்சுள்ள மரபுக் கவிதைகள் நிறைய எழுதியிருப்பினும் புதுக்கவிதைகளாக நமது பார்வைக்குள் கிடைப்பவை எல்லாம் சுமார் இருபத்தியேழு கவிதைகளின் பிரதிகள் மட்டுமே. இவற்றில் பெரும்பாலானவை அவருக்குச் சுமார் நாற்பத்தைந்து வயது இருக்கும்போது எழுதப்பட்டவை.

மழையை ரசிக்கிற, பசியைச் சபிக்கிற, புயலை வரவேற்கிற, நிசியை நேசிக்கிற, உணர்வு ரீதியான ஒரு மனிதரின் எழுத்துப் பதிவுகளில் சிக்கல்கள், சோகங்கள் இவற்றையும் மீறி, மௌனத்தின் புள்ளி தேடி, அதைத் தொட்டுத் தடவி, உள் நுழையப் பார்க்கிற ஒரு முயற்சி, இவரது கவிதைகளில் நாம் கவனம் கொள்ள வேண்டிய கட்டாயத்தை உண்டாக்குகின்றன.

திருவாரூரில் திராவிட சிந்தனையும், மார்க்சிய இயக்கமும் ஒரு புயலைப் போல் மையம் கொண்டிருந்த ஒரு காலகட்டத்தில் பிறப்பெடுத்த இவரது கவிதைகள், "புதுக்கவிதை" வழங்கிய சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கிற அதே நேரத்தில், அந்த காலகட்டத்துக்கேயுரித்தான சிந்தனைகளின் ரேகைப் பதிவுகளையும் தன்மேல் தாங்கி இருப்பதைக் காண முடிகிறது.

எழுபதுகளின் கவிதை உலகம் நவீன தமிழ்க் கவிதை வரலாற்றில் மிக முக்கியமான ஒரு காலகட்டம். மனித நேயம், சமூக மாற்றம் ஆகியவற்றில் நம்பிக்கை கொண்டிருந்த வானம்பாடிகள் ஒரு பக்கமும், கவிதையில் அரசியல் பேசுவது என்பது கலையைக் காயப்படுத்திவிடும் என்று வாதிட்ட 'கசடதபற'க்கள் மறுபக்கமும் எதிர்எதிர்த்திசைகளில் சுறுசுறுப்பாக இயங்கிய காலகட்டம். இந்தக் காலகட்டத்தில்தான் வயலூர் சண்முகத்தின் இந்தக் கவிதைகளும் படைக்கப்பட்டன.

***"புயல்களே வாருங்கள்....***
***பூக்கள் நடுங்கினாலும்***
***பாதகமில்லை***
***புதர்கள் சிதற வேண்டும்***
***பறவைகள் பயந்தாலும்***
***பரவாயில்லை***
***பாறைகள் சிதற வேண்டும்".***

என்று பேசி முன்னேறும் இவரது கவிதையில், வாழ்க்கையை நேசிக்கிற மிக மென்மையான மனிதராக இருக்கிற வயலூர் சண்முகம், அதே நேரத்தில் வாழ்க்கையை வாழத் தகுதியுடையதாக மாற்ற வேண்டும் எனும் பிடிவாதம் கொண்டவராகவும் இருப்பதை நம்மால் காண முடிகிறது.

பூக்கள் நடுங்குவது பற்றி நெஞ்சில் துயரம் நிழலாடுகிறது. ஆனாலும் புதர்கள் அகற்றப்பட வேண்டுமானால் பூக்கள் நடுங்குவது பற்றி கவலைப்பட வேண்டியதில்லை என்கிற முடிவுக்கு வருகிறார் கவிஞர்.

இந்த இடத்தில் ஆந்திர புரட்சிக்கவி செரபண்டராஜுவின் ஒரு தெலுங்குக் கவிதையை நாம் ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியாது.

*"மரங்களுக்கு உயிர் உண்டு*
*என்ற போதிலும்*
*அவை வெட்டப்படக் கூடாதென்று*
*நான் சொல்ல மாட்டேன்*
*இவைகள் இயற்கைக்கு எழில் கூட்டுகின்றன*
*இருந்தாலும்*
*அவை கிள்ளப்படக்கூடாதென்று*
*நான் சொல்ல மாட்டேன்*
*ஏனெனில்*
*எனக்கு ஒரு குடிசை வேண்டும்"*

இயற்கையின் மீது பரிவு கொண்டு இலைகள் கிள்ளப்படும் போதெல்லாம் துடிக்கும் கவிஞரின் மனம் ஒரு குடிசைகூட இல்லாது தவிக்கிற பஞ்சையைப் பார்க்கிற போது மேலும் இளகிவிடுகிறது.

இயற்கையை நுண்மையாகக் கவனித்து அத்துடன் இரண்டறக் கலந்துவிடுகிறபோது கூட சமூகம் குறித்த அக்கறை எப்போதும் தலைதூக்கியதாகவே உள்ளது சண்முகத்தின் கவிதைகளில்.

*"அடி மழைக்குப் பின்*
*தோட்டத்து ஈரமண்மேல்*

*புழு ஒன்று*
*உடல் சுவடு பதித்து*
*ஊர்ந்து கொண்டிருந்தது....*
*அது நெறிந்து வளைந்த*

*மண் சுவட்டின் வடிவம்*
*தமிழின் டகரம்''*

என்று புழு ஒன்று ஈரமண்ணில் பதித்த சுவடு தமிழின் 'ட' கரம்போல் இருப்பதை நுண்மையாகக் கவனிக்கிறார். இதனைத் தொடர்ந்து கவிஞரின் சமூகம் பற்றிய அக்கறை தலை தூக்கிவிடுகிறது. அவர் தொடர்ந்து பேசுகிறார்.

*''அற்பப் புழுகூட*
*எழுத்தறிவு பெற்றுவிட்டதோ?''*

என்ற அவரது வினாவைத் தொடர்ந்து நமது வாக்காளர்கள் எழுத்தறிவு பெற்றவர்களாக இருந்தால் எப்படி இருக்கும் என்கிற தமிழகத்தின் ஒளிமிகுந்த எதிர்காலம் பற்றிய ஒரு கனவில் புகுந்து விடுகிறார்.

இப்படி இயற்கையை நுட்பமாகக் கவனிக்கிற கவிதைகளின் பரிணாம வளர்ச்சியின் பிற்பகுதியில் , சமூகம் குறித்த முற்போக்குக் கருத்துக்களை அவற்றின் மீது தற்குறிப்பாக ஏற்றிவிடுகிற ஒருபாணி திராவிட சிந்தனையினால் பாதிக்கப்பட்ட பாவேந்தர் பாரதிதாசன் தொட்டு இன்றைய கலைஞர் கருணாநிதி வரை திராவிட சிந்தனை சார்ந்த கலை இலக்கிய வெளிப்பாட்டில் நாம் காண முடியும்.

கலைஞரின் ''பச்சைக்கிளி'' எனும் கவிதை ஒன்றில்,

*“சுரைக்காய்ப் பிஞ்சின் தலையில் மிளகாய்*
*பழத்தைச் செருகி இடையில் மல்லிகை*
*இலைகள் சிறகாய்ப் பின்புறம் தாழை*
*மடலை வைத்தாய் பச்சைக் கிளியே!”*

என்று நீளும், கவிதையின் பிற்பகுதியில், அவர் சிறையில் அடைக்கப்பட்டது பற்றிய அரசியலைப் பேசத் தொடங்கி விடுகிறார்.

இது திராவிட இலக்கியபாணி . இந்த பாணியை வயலூர் சண்முகம் அடிக்கடிக் கையாள்வதை நாம் இவரது கவிதைகளில் காண முடிகிறது. திராவிட சிந்தனையும், மார்க்சிய சித்தாந்தமும் இவரது கவிதைகளின் உள்முகப்பயணத்தை மடைமாற்றம் செய்து, மெலிதாகப் பேசும் இவரது மௌனக் குரலை, இடிபோல் முழக்கும் ஒரு கலகக் குரலாக மாற்றிவிடுகின்றன.

*“மொட்டுகளை ஊதவரும்*
*தென்றலாகவா இருக்கப்போகிறாய்?*
*அதற்கு நேரமில்லை*
*மலை உச்சிகளையும்*
*புழுதிக் காடாக்கும்*
*மூர்க்கச் சூறையாக*
*அவதார மெடு”*

என்று பெருங்குரலெடுத்துப் பேசத் தொடங்கி விடுகிறார்.

இவரது கவிதைகளின் சிறப்புத்தன்மையாக விளங்கித் தோன்றி, இவரது படைப்புகளை அந்தக் காலகட்டத்து திராவிட இலக்கியங்களிலிருந்து வேறுபடுத்திக்காட்டும் ஒரு முக்கியமான பண்புக்கூறு இவரது வித்தியாசமான, அதே நேரத்தில் ஆழமான படிமங்களின் தேர்வு.

'மழை' எனும் கவிதையில், வயலூர் சண்முகம் காட்டும் புதிய உவமைகளைப் பாருங்கள்:

*"மழை*
*பெய்து கொண்டிருக்கிறது*
*வீட்டிற்குள்ளேயும்*
*வெளியேயும்*
*.........*
*ஆற்றலற்ற மாணவனின்*
*பரிட்சை பயங்களைப்போல்*
*மழை பெய்து கொண்டிருக்கிறது*
*........*
*மழை பெய்து கொண்டேயிருக்கிறது*
*சதா அலைந்து திரியும்*
*முட்டாள்களின் சந்தேகங்களைப் போல"*

என்று மழையைப் புதிய முறையில் கொண்டாடுகிறது இவரது கவிதை.

'சகானா' எனும் கவிதையில்

*"அட்சதைகள் விழும் நேரம்*
*இமையிலிருந்து உதிரும்*
*உப்புப்பூக்களை*
*உன் ஸ்வர விரல்களால்*
*துடைக்கும் நீ*
*அந்த மௌன விழிகளின்*
*நிரந்தரத் தோழி"*

என்று பேசுகிறபோது, இவரது கவிதைகளில் கையாளப்படும் அலங்கார ஜாலங்கள் ஜொலிக்கும் மொழி, கவிதையின்

அனுபவத்தளம் நோக்கிய நமது பயணத்தைச் சற்றுத் தடை செய்வதென்னவோ உண்மைதான்.

வார்த்தைஜால ஆடைகளும், மணிப்பிரவாள அணிகலன்களும் அணிந்தவைதான் வயலூர் சண்முகத்தின் கவிதைகள் என்ற போதிலும் அனுபவங்கள் அரங்கேற்றும் நாடக மேடையைக் கடந்து, அவற்றின் அரிதாரம் கலைத்த நிலையிலான உண்மை சொரூபங்களைக் காண, ஒப்பனை அறைக்குள்ளேயே நுழைந்து பார்க்க, அவை தடைகளாக இல்லை என்பது முக்கியமானது. இவரது கவிதைகள் இந்த அலங்கார ஆசைகளைத் துறந்திருந்தால் மேலும் புதிய பிரதேசங்களுக்கு நம்மை அழைத்துச் சென்றிருக்கக்கூடுமோ என்று தோன்றுகிறது.

ஆனால் அவர் கவிதைசெய்ய முற்பட்ட காலத்தைக் கணக்கிலெடுத்துக் கொண்டால், அந்த காலகட்டத்து கவிஞர்களிடமிருந்து, குறிப்பாக அவர் சார்ந்திருந்த திராவிடபாரம்பரிய இலக்கிய வெளிப்பாடு களிலிருந்து இந்தக் கவிதைகள் வித்தியாசமானவைகளாகவே அடையாளம் காட்டுகின்றன. இந்த காலகட்டத்துக் கவிதைகளில் பொதுவாக புராணிக நிகழ்வுகளைக் கவிதையின் உத்தியாகப் பயன்படுத்தும் போக்கு இவரிடம் ஓரிடத்தில் கூட காணப்படவில்லை என்பது வியப்பளிக்கிறது.

நிகழ்வுகள் நெஞ்சில் எழுப்பும் அலை வரிசைகளைத் தவறவிட்டுவிடாமல், அவற்றின் நூலேணி பற்றி கவிதையின் சிகரம் நோக்கி மலையேறுகிறபோது, பல்வேறு விசாரணைகளை இவர் மேற்கொள்கிறார். இவை இவரது கவிதைகளை வித்தியாசப்படுத்துகின்றன. இந்த விசாரணைகளின் மூலமாக இவரது கவிதைகளின் சோகமும், மகிழ்ச்சியும் கலந்த ஒரு புதுச் சுவையை உண்டாக்க இவரது படைப்புகள் சதா முயல்கின்றன.

*''முட்கள் பயிரிடப்பட்ட*
*ஒற்றையடிப்பாதையில்*
*நடக்க மட்டுமல்ல*
*நடனமாடவும் கற்றுக் கொண்டுவிட்டது*
*என் இதயம்.*

*ஒரு செளந்தர்ய லாகிரியோடு*
*என் கண்ணீர் கூட*
*புன்னகைக்கத் தொடங்கி விட்டது*
*இப்போதெல்லாம்''.*

என்று பேசுகிற இவரது கவிதைகள் சோகங்களை வாசகனுடன் பரிமாறிக் கொள்ளத் தயாராயிருக்கிற அதே நேரத்தில், நம்பிக்கையின் தீபத்தை அணையவிடாமல் காப்பவையாகவும் இருப்பது மிகவும் பாராட்டப்பட வேண்டிய ஒன்று.

இன்றைய கவிதை, தொழில்நுட்ப அறிவியல் கொண்டு வந்து திணித்த ஒரு தனிமைக்கு இரையாகிவிட்ட பின்னணியில் தனி மனித வாழ்க்கைக்கு எந்த அளவுக்கு முக்கியத்துவம் ஏற்படுகிறதோ அதே அளவுக்கு, மனிதனின் கூட்டு வாழ்க்கைக்கான முக்கியத்துவத்தையும் உடன் பகிர்ந்து கொள்ளத்தயாராக இருக்கிற, வயலூர் சண்முகத்தின் கவிதைகள் நம்பிக்கையின் பிராணவாயுவை ஆகாயம் முழுவதும் நிறைத்து விடுகின்றன. அக உலகம் சார்ந்த அனுபவங்கள், புற உலகம் சார்ந்த விழுமியங்களால் பாதிக்கப்படுகிறபோது, வயலூர் சண்முகத்தின் மொழி வெளிப்பாடு ஒரு திடவடிவச் சிற்பமாக உருக்கொண்டு விடுகிறது.

'ஒரு மரத்தின் உயரம் அது விழுந்துவிட்ட பிறகுதான் தெரிய வருகிறது' என்கிற பழமொழியின் உண்மையான அர்த்தத்தை கவிஞர் வயலூர் சண்முகம்

நம்மிடையே இன்றில்லாத ஒரு சூழலில் அவரது கவிதைகளை மட்டுமே படிக்கிறபோது உணர்ந்து கொள்ள முடிகிறது.

*"மனிதர்கள் சாகும்போது அவர்களுக்குள்*
*உலகங்கள் சாகின்றன"*

என்று பேசுகிறான் ரஷ்யக் கவிஞன் யெவ்டுஷெங்கோ. வயலூர் சண்முகத்தை பொறுத்தமட்டிலும் இது பொய்யாக்கப் பட்டு விட்டது. ஏனெனில் அவர் ஒரு கவிஞர்.

# நாயகி நிழலில் மின்னல் விதைகள்!

**சுவாமி ஜீவன் ப்ரமோத்**

எழுபதுகளின் தொடக்க ஆண்டுகளில் கவிஞர் செம்மல் என்ற புனைபெயரில் அறியப்பட்ட வயலூர் சண்முகத்தோடு நான் பழக நேர்ந்தது. என் ஆன்ம விதை, அனுபவவளங்கள் தேடி அலைந்த காலம் அது. எஸ்.எஸ்.எல். சி தேர்வு அப்போதுதான் முடிந்திருந்தது. கல்விச்சூழல், குடும்ப உறவுகள், நல்ல நண்பர்கள், கலைநயம் மிக்க கோயில்கள், அங்கு வளர்க்கப்பட்ட பக்திப்பார்வை என்று காரைக்கால் ஒரு பக்குவமான வயலாக திகழ்ந்தது. என் ஆன்மவிதை அங்குதான் வேர்பரப்பி வளர்ந்தது. பூக்கவும் காய்க்கவும் நான் தாகம் கொண்டு அலைந்த ஆண்டுகள் – எழுபதுகள். அறிஞர் அண்ணா அரசினர் கலைக் கல்லூரியின் நூலகத்தில் தமிழ் நூற்கள் பகுதியை பசித்த பசு போல மனதார மேய்ந்து கொண்டிருந்தேன். இடைஇடையே வாழ்வு பற்றியும் – உலகம் பற்றியும் நூறுநூறு கேள்விகள் எழும். சோர்வும், சலிப்பும், உற்சாகமும் மேதமைப் போதையுமாய் மாதங்கள் வளரும். அந்தக் காலங்களில்தான் வயலூர் சண்முகத்தோடு நான் பழக நேர்ந்தது.

அது 1973 ஆம் வருடம். ஒரு மரத்தில், புத்தம் புதுமலர்கள் பூத்த கிளை ஒன்று காற்றின் கோரத்தால் திடீரென

முறிக்கப்பட்டது போல என் அப்பா மரணமுற்றார். சில வாரங்கள் என்னால் கல்லூரிக்குச் செல்ல இயலவில்லை. கல்லூரியில் சமர்ப்பிக்கப்பட வேண்டிய ஒரு சேர்க்கை மனுத்தாளில் என் அப்பாவின் கையெழுத்து தேவைப்பட்டது. மரணம் என் தந்தையை எட்டிய சில தினங்களுக்கு முன், அவர் என்னோடு மகிழ்வாகப் பேசிக் கொண்டிருந்த ஒரு வேளையில் அவரிடம் கையெழுத்து வேண்டினேன். அதுமட்டுமல்லாமல் அவருக்கும், எனக்கும், சமுதாய அமைப்புக்கும் இடையே தி.சு. பாலகிருஷ்ணப்பிள்ளை என்ற பெயரால் வளர்ந்து கொண்டிருந்த சாதிப் பிரச்னையை எடுத்து சந்தியில் நிறுத்தியதும் அப்போதுதான். ''என் திருப்பூர்த் தாத்தா சுப்ரமணியம் உங்களுக்கு பாலகிருஷ்ணன்னுதானே பேர் வச்சாங்க ''பிள்ளையை'' கையெழுத்திலே எப்போதிலிருந்து சேர்த்துக்கிட்டீங்க?'' என்று அப்பாவிடம் நான் கேட்ட ஒரு கேள்வியால் அவருக்குள் பல கேள்விகள் எழுந்திருக்க வேண்டும். கடைசியாய் என் கல்லூரி சேர்க்கை மனுத்தாளில் அவர் கையெழுத்துப் போட்டு நான் பார்த்தது. 'தி.சு.பாலகிருஷ்ணன்' என்று மட்டும்தான்.

அப்பா மறைந்து ஏறத்தாழ இரண்டு மாதங்கள் ஆன நிலையில் ஒரு சனிக்கிழமை மாலையில் கவிஞர் செம்மலிடமிருந்து ஒரு கடிதக்குறிப்பு வந்திருந்தது.

'நாளை காலை - அல்லது உங்களுக்கு வாய்ப்புள்ள போது கீழ்கண்ட முகவரியில், எனது இல்லத்தில் உங்களைச் சந்திக்க விரும்புகிறேன்.

இப்படிக்கு
செம்மல்

53, 'நாயகி நிழல்'
வடக்குத் தெரு
தளத்தெரு
காரைக்கால்

அது 1973 ஜூலையில் ஒருநாள். கவிஞர் செம்மல் அவர்களை முதன் முறையாக நான் சந்தித்த நாள். காரைக்காலுக்கு வடக்காக ஒரு இரண்டுகிலோ மீட்டர் தொலைவில் தளத்தெரு ஒரு சிற்றூர். காந்தி படிப்பகம் என்ற ஒரு பழைய நூலகமும், ஒரு தொடக்கப் பள்ளிக்கூடமும். மாரியம்மன் கோயிலும் ஒரு சிவன் கோயிலும் தாண்டி சற்று தொலைவில் செம்மல் வீட்டிற்கு வழிகாட்டப்பட்டது. பம்பர விளையாட்டு மும்முரத்தில் இருந்த சிறுவர்களைக் கடந்து சைக்கிளை நிறுத்திப் பூட்டிவிட்டு, வாசலில் 'நாயகி நிழல்' என பொறிக்கப்பட்டிருந்த ப்ளாஸ்டிக் பெயர்ப்பலகையைப் பார்த்து கொண்டே கதவைத் தட்டினேன். நடுத்தர வயதில் வெளியே வந்த அந்தப் பெண்மணியிடம் ''அம்மா! கவிஞர் செம்மலைப் பார்க்கனும்!'' என்றேன்.

பழைய தஞ்சாவூர் பாணியில் கட்டப்பட்டிருந்த அந்த அழகிய ஓட்டு வீட்டிற்குள் என்னை அழைத்துச் சென்றார். முற்றமும் ஊஞ்சல் கூடமும் தாண்டி ''இங்க தான் வாங்க!'' என்று ஒரு அறைக்குள் என்னை அழைத்துச் சென்றார்கள் அந்த அம்மா.

உங்களைப் பாக்க வந்திருக்காங்க'' - என்று அறிமுகப்படுத்திவிட்டு சமையல் கட்டு நோக்கி விரைந்தார் அம்மா (அவர்தான் வைதேகி அம்மாள். செம்மலின் மனைவி. கவிஞர், எழுத்தாளர், இயக்குநர் எஸ். ராஜகுமாரனின் தாயார்!)

''வாங்க! சுரேசாவா!'' என்று என்னை வரவேற்றார் செம்மல். தாகூரை ஒத்த வெள்ளைத் தாடியுடன், அமைதியாய், பரபரப்பு ஏதுமில்லாமல் இயல்பாகத் தவம் கலைந்த ஒரு யோகியாகத் தோற்றமளித்தார். அறிமுக உரையாடல்களுக்கிடையே தேனீர் வந்தது. அதன் பிறகு, நான்குமணி நேரங்கள் நழுவியது தெரியாமல் பேச்சு சுவைபரக்க நகர்ந்தது.

குடும்ப உறவுகளுக்குள் வழமை மாறாமல் உழன்று கொண்டிருக்கும் தமிழ் சினிமா, தேசிய அளவிலும் உலக அளவிலும் விரிவடைய வேண்டிய நீண்ட பயணத்தின் தொடக்கம் கூட இன்னும் நிகழவில்லையே என்ற வருத்தம் தொனிக்க பேசினார்.

அந்த அறையில் சோவியத் நாடு, சோவியத் ஃபிலிம், மஞ்சரி, பேசும் படம், குமுதம், விகடன் உள்ளிட்ட பல்வேறு இதழ்களும் இரைந்துகிடந்தன.

திரையுலகில் கதாசிரியராய் வளரத் தொடங்கியுள்ள ஒரு மகா விருட்சத்தை - தனக்குள் அடையாளம் காட்டிப் பேசினார். நாவல், சிறுகதை, கவிதை, நீள் கதைக் கவிதை - என்றெல்லாம் அந்த விருட்சத்தில் கிளைகள் பல மலிந்திருந்தன. எனக்குள் ஒரு ஞானி ஒளிந்திருப்பதாய் நான்குமணி நேர உரையாடலுக்குப் பின் சொன்னார் அவர்.

இப்படித் தொடங்கியது தான் எங்கள் நட்பு. தந்தையின் பிரிவால் நேர்ந்த துயரத்தை செம்மலின் தொடர்பால் நான் இழந்து கொண்டிருந்தேன். நாடு முழுவதிலும் பரவியிருந்த அரசியல் சீர்கேடு, வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற துயரங்களின்பால் என் மனம் திசைமாறியது. செம்மலோடு நேர்ந்த நட்பின் நகர்வில் என்னைக் கொஞ்சம் கொஞ்சமாய் செம்மைப்படுத்தியிருந்தார் அவர்.

இடையில் ஒருநாள் நான் எழுதியிருந்த கவிதைத் துண்டுக் காகிதங்களையெல்லாம் தொகுத்து ஒரு நீண்ட கட்டுரைக் குறிப்பேட்டில் எழுதித் தரும்படி அவர் கேட்டதை நான் மதித்தேன். கவிதைகள் பலவற்றைத் தொகுத்தபோதுதான் எத்தனை கவிதைகளை நான் எழுதி அலட்சியப்படுத்தியிருக்கிறேன் என்பது எனக்குப் புரிந்தது. தொகுப்பை அவரிடம் கொடுத்தபோது ஒரு மணி நேரத்துக்கு

மேல் வாசிப்புக்குள் ஆழ்ந்த செம்மல் ''தொகுப்புக்கு என்ன பெயர் வைத்தீர்கள்?'' என்றார்.

'மின்னல் விதைகள்' என வைக்கலாம் என்றேன். அவருக்குப் பிடித்திருந்தது. ''சரி'' என்றார். அவருடைய கையெழுத்தால் 'மின்னல் விதைகள்' எனப் பெயர் எழுதினார். சிறிது யோசனைக்குப் பின் ''உங்கள் பெயரில் மாற்றம் ஏதும் செய்யலாமா?'' என்றார். அது, புதுக்கவிதை எழுத வருவோர் புனைபெயரில் தங்களின் புதுமுகத்தைக் காட்டிக் கொண்டிருந்த காலம். வேள்வி, வானம்பாடி இலக்கிய வெளிவட்டம், பரிமாணம் என்றெல்லாம் புதிய தமிழ் இதழ்கள் தோன்றி தமிழ்ச் சமுதாயம் செல்ல வேண்டிய பாதையை சீரமைத்துக் கொண்டிருந்த காலம். கல்லிகை - ஞானியும், ஒளிப்பறவை – சிற்பியும், அக்னிப் புத்திரனும், புலவர் ஆதியும் போல புதுப்புதிய புனை பெயர்களுடன் கவிஞர்கள், எழுத்தாளர்கள் பாமர மக்களோடு புத்திலக்கியம் வழி கைகோர்க்கத் தொடங்கிய காலம் அது.

புதியதென விரியும் தமிழ்ச்சுடர் வானில் பழம் பெயர்தாங்கிப் புதுக்கவிதை படைப்பதன் பொருத்த மின்மையை நான் அப்போதுதான் எனக்குள் உணர்ந்தேன். 'யுகசிற்பி' என மனதுக்குள் நான் பிறந்த அதே வேளையில் - செம்மல் என் விழிகளைப் பார்த்து ''யுகசிற்பி ஆகுங்களேன்!'' என்ற போது எனக்குள் ஒரு பேரதிசயம் ஒளிச்சிற்பம் ஆயிற்று. (சில வருடங்களுக்கு முன் திருச்சி ஓஷோ ஆஸ்ரம தீட்சையின்போது சுவாமி 'ஜீவன் ப்ரமோத்' என்ற பெயர் எனக்குச் சூட்டப்பட்டது)

கவிஞர் செம்மல் அவர்களின் நாயகி நிழலில் இப்படித்தான் நானும் என் முதல் கவிதைத் தொகுப்பும் கருவுற்றுப் பெயர் சூடி காலத்தின் சேவையாய் வளர்த்தோம்.

அதன்பிறகு செம்மலுக்கும் எனக்கும் இடையில் இலக்கிய நட்பு உறவாய் தொடர்ந்தது. அந்த ஆலமரத்தில் காலத்தை மீறிய பல புதிய விதைகளைக் கண்டு நான் அதிசயத்திருக்கிறேன். சினிமா, இலக்கியம், சமுதாயம் பற்றிய பார்வை எல்லாமே அவரிடம் புதிதாகவும் கூர்மையாகவும் சிலிர்த்தெழுந்தன. பாரதியின் ரௌத்ரம் அவரின் எண்ணங்களில் கொந்தளிப்பதை நான் பார்த்திருக்கிறேன். 'எனது படைப்புகள் இன்னும் இருபத்தைந்து ஆண்டு கழித்துதான் பேசப்படும்!' என்பார். என்ன ஆச்சர்யம்!

அந்த மகாகவியின் வாக்கு அப்படியே பலித்திருக்கிறது. செம்மலின் விதைபற்றி, ஜனித்து இன்று விருட்சமாய் வளரத் தொடங்கியிருக்கும் எஸ். ராஜகுமாரனின் முயற்சியால், அவருடைய முதல் கவிதைக் கனவு இன்று நூலாகியிருக்கிறது. தந்தையின் விழிகண்ட கனவு, தமயனால் அரங்கேற்றம் காண்கிறது. இது காலத்தின் கொடூரமா? இல்லை அற்புத ரசமாற்றமா...

அணிந்துரையில் விமர்சகர் இந்திரன் குறிப்பிட்டதுபோல் திராவிட இயக்க இலக்கியக் களத்தில் உருவானாலும், அந்தத் தமிழியக்கச் சிந்தனைகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டவர், முற்றிலும் புதிதானவர் செம்மல் (வயலூர் சண்முகம்) என்பதற்கு இந்த சிறு கவிதைத் தொகுப்பு பெரிய ஆதார ஆவணம் என்ற மிகையற்ற உண்மையை, தமிழிலக்கிய உலகம் அறிந்து போற்றும் என்பது எனது நம்பிக்கை!

**யுக சிற்பி**
(சுவாமி ஜீவன் ப்ரமோத்)

'தியானபூமி'
63, காமராசர் சாலை
காரைக்கால் - 609 602.

# சந்தோஷமா இருக்குப்பா!

எஸ். ராஜகுமாரன்

சென்னையில் வெய்யிலும் ரசிக்கும்படியாய் இல்லை. மழையும் ரசிக்கும்படியாய் இல்லை. ஆச்சர்யம் மிகுந்த சிறு பிராயத்தில் மழை வருடந்தோறும் ஒரு அழகான அத்யாயம். வெய்யில், வெம்மை தெரியாத பள்ளி விடுமுறைச் சுகம். திருவிழா வேறு கூடுதல் இன்பம் சேர்க்கும். அம்மாவை இழந்து ஒரு வருடம் ஆன நிலையில் அப்பாவின் இந்தக் கவிதைத் தொகுப்பு நூலாக்கப் பணிகளில் ஈடுபட்டிருக்கும்போது இதோ வெய்யில் பிளக்கத் தொடங்கிவிட்டது. "அப்பா! அடுத்த மாசம் எக்ஸாம் முடிஞ்சதும் ஊருக்குப் போகணும்!" என்ற என் மகள் நேசிகா பழைய கோடைக்கால ஊர் ஞாபகங்களைக் கிளறிவிட்டுவிட்டாள்.

தளத்தெரு கிராமம், கோடை விடுமுறையும், மாரியம்மன் கோயில் திருவிழாவும், பால்ய நண்பர்களும் நினைவில் வந்து அப்பாவையும் அம்மாவையும் உயிர்ப்பித்தன. கவிதை நூலை பிழை திருத்தும்போது அம்மாவின் வீட்டிலுள்ள அப்பாவின் தெற்கு அறைக்குள் சென்று உட்கார்ந்து கொண்டுவிட்டது மனசு. எழுதப்பட்டு முப்பதாண்டுகள் கழித்து நூல் வடிவம் பெறுகிறது அவருடைய இந்தநூல். எனது நூல்களையெல்லாம் படித்து மகிழ்ந்த அம்மா அப்பாவின் நூல் வெளிவரும் இந்த தருணத்தில் இல்லை...

அப்பா அடிக்கடி சொல்வார் 'என்னை - என் எழுத்தை தமிழகம் புரிந்து கொள்ள இன்னும் 25 ஆண்டுகள் ஆகும்!' என்று. அதுதான் நடந்திருக்கிறது. இது யூகமா? தீர்க்க தரிசனமா? தெரியவில்லை.

அப்பாவின் பிறப்பு வளர்ப்பு பற்றியும், குணாதிசயம், கொள்கைகள் பற்றியும், கரடுமுரடான அவருடைய வாழ்வுப் பயணம் பற்றியும் ஒரு நாவல் எழுதும் அளவுக்கு விஷயங்கள் இருக்கிறது. அவரைப் பற்றி சுருக்கமாய் எழுதுவதென்பது இயலாது. இந்தச் சூழலில் சில பகிர்வுகள்.

இந்த நூலின் 'மரபுக் கவிதைகள்' எனத் தலைப்பிட்ட இரண்டாம் பகுதிக்கு திரு. இந்திரன் அவர்களின் அணிந்துரை பொருந்தாது. முன் பகுதியில் உள்ள புதுக் கவிதைக்ளை மட்டும் படித்தே அவர் அணிந்துரை எழுதித் தந்தார். அவருக்கு என் நன்றிகள்.

இந்த நூலில் உள்ள அப்பாவின் மரபுக் கவிதைகள் எழுதப்பட்ட காலம் ஐம்பது மற்றும் அறுபதுகள் ஆகும். பிரசண்ட விகடன், கண்ணன், திராவிட நாடு, கலைக்கதிர், விஜயா, பால்யன், அறப்போர், தமிழ் சினிமா போன்ற இதழ்களில் பிரசுரமானவை. இக்கவிதைகளை இன்று வரை பாதுகாப்பாக நான் சுமந்துவர ஏதுவாக, அன்றே திருவாரூர் வனமாலி அச்சகம் வழியாக தட்டச்சு செய்து கட்டமைப்பு செய்து தந்த என் மாமா புதுப்பத்தூர் திரு. பி.எஸ்.டி. தட்சிணாமூர்த்தி அவர்களை இங்கே நன்றியுடன் நினைவு கூர்கிறேன்.

மிகுந்த முனைப்புடன் இக்கவிதைகளை அழகிய நூலாக்கம் செய்து வெளியிடும் நண்பர் நாதன் அவர்களுக்கு இதய நன்றிகள். அப்பாவைப் பற்றிய நினைவுகளை இயல்பாய் பகிர்ந்து கொண்டிருக்கும்

அன்பிற்குரிய சுவாமி ஜீவன் பிரமோத் (யுக சிற்பி) அவர்களுக்கும் என் நன்றி.

'அப்பா' உங்க கையெழுத்திலும், பிறகு காப்பி எடுக்கும்போது அக்கா மற்றும் என் கையெழுத்திலுமே பார்த்த உங்க எழுத்தை நூலாகப் பார்க்கும்போது 'ரொம்ப சந்தோஷமா இருக்குப்பா! இதைப் பார்க்க நீங்கதான் இல்ல!

நேசமிக்க
**எஸ். ராஜகுமாரன்**

123, காரணீஸ்வரர் கோயில் தெரு
மயிலாப்பூர்
சென்னை - 600 004.

# கவிஞரைப் பற்றி....

| | |
|---|---|
| இயற்பெயர் | : வயலூர் சண்முகம் |
| புனைப் பெயர் | : செம்மல், மாவெண்கோ |
| பிறப்பு | : 20.2.1924 |
| இறப்பு | : 23.7.1983 |
| பிறப்பிடம் | : வயலூர் கிராமம்<br>திருவாரூர் மாவட்டம் |
| இறுதி வாழ்வும் மறைவும் | : தளத்தெரு கிராமம்,<br>காரைக்கால் |
| கவிதைகளின் காலம் | : எழுபதுகளின் முற்பகுதி |
| கல்வி | : அண்ணாமலை<br>பல்கலைக்கழகத்தில்<br>இண்டர்மீடியட் |
| குறிப்பிடத் தகுந்த நண்பர்கள் | : கலைஞர் மு. கருணாநிதி,<br>உவமைக் கவிஞர் சுரதா,<br>கவி கா.மு.ஷெரீப்,<br>திரைப்பட வசனகர்த்தா<br>ஆரூர்தாஸ்,<br>திரைப்படத் தயாரிப்பாளர்<br>இராம. அரங்கண்ணல்,<br>சின்னக்குத்தூசி தியாகராஜன். |

# ஒரு அறிவிப்பு

என்
வாழ்வுப் பெருவெளியின்
முக்கால் பங்கு விஸ்தீரணத்தை
துரோகிகளின் கூடாரங்களே
அடைத்துக் கொண்டு விட்டன.

மீதி கால்வாசிப் பரப்பில்
பேதமையின் குடியிருப்பு
அசடுகளின் ஆக்ரமிப்பு
சுய ஆராதனையின்
சூடத் தட்டுகள்

இருப்பினும்
நான் இருக்கிறேன் -
ஒரு மூலையில்
ஒண்டிக் கொண்டு.

ஒரு
ராட்சச வெளிச்சம்
வழியும்
விடியல் தரிசனம்
வேண்டி
என்
எதிர்கால இமைகள்
விழித்துக் கொண்டிருக்கின்றன....

எனது தத்துவங்கள்
கத்துவதில்லை
அவைகளுக்கு
ஒலிபெருக்கிகளை
பிடிப்பதில்லை.
அவைகளின் உதடுகள்
மலரிதழ்களைப் போல்
மௌனமானவை.

அவற்றின்
ஊர்வலம்
தாமதமானாலும்
தனித்துவமானதாகவே
நடக்கும்.

அப்போது
ஒரு தேஜோமய வசந்தம்
முற்றுகையிட்டிருப்பதாக
என் சோலைகள் மட்டுமல்ல-
எல்லா சோலைகளும்
அறிவிக்கும்.

●

# குக்கூ....

குக்கூ....
குக்கூ.....
குயிலே -
இது அழுகையா?
அழைப்பா?

ஆனிப்புழுதியால்
சூரியன் கண்கசக்க
தென்றலடிப்பு
மெலிந்துவிட்டதே -
அதற்காக
அழுகிறாயா?

இல்லை
காவிவெள்ள
காவிரி நுரைகளில்
ஆடிக்களிக்கப் போகும்
ஆடியை வரவேற்று
அழைக்கிறாயா?

குக்கூ....
குக்கூ.....

கழனி விரிப்புகளில்
கலப்பைகள்
உழுகின்றன.

அட-
பச்சை முளைத்துளிகளில்
விதை அடிமைகளின்
விடுதலைக் களியாட்டம்!

நாணித் தலைகுனியும்
கதிர் காலமும்
வந்துவிட்டது....

இப்பொழுதும்
எங்கோ உட்கார்ந்து
காற்றில் எழுதுகிறாய்
உன் கவிதைகளை....

குக்கூ....
குக்கூ....

இது
அழுகையா
அழைப்பா?

இப்பொழுது
புரிகிறது
குயிலே.....

நீ
அழவில்லை-
அழைக்கிறாய்!

குக்கூ.....
குக்கூ.....



# டகாரப்பியாசம்

ஆடிமழைக்குப் பின்
தோட்டத்து ஈர மண்மேல்
புழு ஒன்று
உடல் சுவடு பதித்து
ஊர்ந்து கொண்டிருந்தது....

தெற்கிலிருந்து
வடக்கே நகர்ந்து
பிறகு
மேற்கே
திரும்பி
வலது கை வாட்டில்
மெல்ல நகர்ந்து
நின்று விட்டது.

அது
நெளிந்து வளைந்த
மண் சுவட்டின் வடிவம்
தமிழின் டகரம்.

அற்பப்புழு கூட
எழுத்தறிவு
பெற்று விட்டதோ?

இந்த
டகராப்பியாசமாவது
நம்
மதிப்பிற்குரிய
வாக்காள மகாஜனங்களுக்கு
இருந்திருந்தால்...

இனியாவது
கிடைக்குமென்றால்...



## தரிசனம்

மூன்று நாள்
விரதம் இருந்தோம்
இமை மூடாமல் -
காய்ந்த குடலோடு
தேவியை தரிசிக்க.

அம்மாடீ!

எங்கள்
பசி - பக்தியை மெச்சி
பாருலகாளும்
அந்த மகாமாதா
இதோ
தரிசனம் தந்துவிட்டாள் -

சிவப்புத் திருமேனி
கல்மண் எலிப்புழுக்கை
ஆபரண அலங்காரங்களோடு
எப்படி மந்தகாசம் புரிகிறாள்
மட்டக் குருவை மாதா!



# சூத்திரம்

வல்லூறுகளற்ற
வானம்
புறாக்களுக்காகவும்

புலிகளற்ற
கானகம்
மான்களுக்காகவும்

மேடுகளற்ற
பாதைகள்
ஓடைகளுக்காகவும்

செவிடற்ற
காதுகள்
புல்லாங்குழல்களுக்காகவும்

நிச்சயம் உருவாகும்
என்றோ ஒரு விடியலில்

அதுவரை
அச்சந்தவிர்ப்பதே
வாழ்தலுக்கான
சுருக்கச் சூத்திரம்



# இது வேறு தருணம்

மொட்டுகளை
ஊதவரும்
தென்றலாகவா
இருக்கப் போகிறாய்?

அதற்கிது
நேரமில்லை.

மலை உச்சிகளையும்
புழுதிக் காடாக்கும்
மூர்க்கச் சூறையாக
அவதாரமெடு.

உன் விரல்கள்
விஷக்கத்தியாக
பாய வேண்டிய
குடல்கள் அநேகம்
இந்த தேசத்தில்.

உன் உதடுகளில்
உட்காரும்
வேய்ங்குழலை
வெகு தொலைவில்
வீசி எறி..

இளைஞனே!

இது
குழலூதும்
நேரமல்ல.



## தூத்தூ...

அளக்க முடியாத
கடல்
உனது தாய்-

என்றாலும்
அளவீடுகள்
உன்னைத்தான்
முதலில்
முன்மொழிகின்றன.

ஆனால்
நீயும்
அரசியல் கோமாளியின்
எல்லையில்லா நாக்காகவும்
பரமாத்திக உபதேசியின்
இயந்திர நாக்காகவும்
ஆகும்போது

தூத்தூதான்.



# மயிலிறகின் மென்மையை விட....

நீ
எங்கே இருக்கிறாய்?
நீ
இருப்பது நிஜமா?
இந்தக் கேள்வியாகவேதான்
நீ வாழ்கிறாய்என்று
நினைக்கிறேன்.

உலகக் குதியாட்டமெல்லாம்
ஒரு கோணத்தில்
உன்னை
தரிசிப்பதற்கான
தவம்தான்.

உனது
நெடிய
ரோஜாச் சாலையில்
ஊர்வலிக்க
இந்த மானுடந்தான்
என்னபாடு படுகிறது.

அன்று
உதிர நாற்றம் வீசும்
வாளாலும்
இன்று
அணுகுண்டுகளாலும்
உன்னை
வாங்க முடியவில்லை.

வைரங்களின் புன்னகை கூட
உன்னை
அணுக முடியவில்லை.

மதுவிடமும்
கனவு மாத்திரையிடமும்
தன் துன்பத்தை
அடகு வைக்கும்
பேதை மானிடத்திடங் கூட
உன் உருவத்தை
நீ காட்டுவதில்லை.

வெளிச்சமற்ற இருட்டில்
உன் சாயலோ...
ஓசையற்ற மௌனத்தில்
உன் சுவடுகளோ....

அப்படித்தான்
தென்படுகிறது
எனக்கு.

வாழ்வுக்கு அப்பால்
மரணத்தின்
சாஸ்வத வெற்றிடத்தில்
நீ வசிக்கிறாயோ?

இல்லை
அதுவே
உனது சாம்ராஜ்யமா?

மயிலிறகை விட
மென்மையாய் இருக்கும்
உன் மேன்மையான கைகளால்
என் இதயத்தை
கொஞ்சம் வருடுகிறாயா
அமைதியே?



# யாசகம்

வானத்து விளக்கேற்றியே!
கமல இதழ்களில்
இச்சிட்டுத் தரும்
அந்தக் கதகதப்பை
எனக்கும் தருகிறாயா?

ஏனெனில்
அப்படியோர்
காதல் கதகதப்பை
என் ஆன்மா
கண்டதில்லை.

காலைப் பூங்காற்றே!
உன் மாய ஊதலை
எனக்கும் கொடேன்.

அந்த ராகபோதைக்கு
என் ஆன்மா
தவிக்கிறது.

வண்ணப் பூக்களே!
உங்கள்
வாசனைச் சிரிப்பை
எனக்கும்
தருவீர்களா?

அந்த நுகர்ச்சிக்குத்தான்
என் நாசி ஆசைப்படுகிறது.

சிட்டுக் குருவிகளே!
எனக்கும் சில
சிறகுகள் தர முடியுமா?

அந்த
எல்லையில்லா சுதந்திரத்துக்குத்தான்
என் ஆன்மா
ஏங்கித் தவிக்கிறது.

# நடைவண்டி

நீ அழைத்துப் போவதுமில்லை
நிஜமாக
இழுத்துப் போவதுமில்லை.

உனது
ஜட சகடைகளை
உருட்டும் சக்தி
அந்த
அறியாக்கைகளிடமிருந்து
உனக்கு கிடைப்பது என்பதே
உண்மை.

ஆனால்
நீதான்
நடக்கக் கற்றுக் கொடுக்கிறாயாம்.

உண்மையைச் சொல்.
எங்கே
கற்றுக் கொண்டாய்
இந்த உத்தியை?

எங்கள்
ஜனநாயகத்திடம்தானே?


# மழை

மழை
பெய்து கொண்டிருக்கிறது
வீட்டிற்குள்ளேயும்
வெளியேயும்....

திறமைமிக்க விற்பனையாளனின்
வியாபார சவால்களைப் போல

ஆற்றலற்ற மாணவனின்
பரிட்சை பயங்களைப் போல-

மழை பெய்து கொண்டிருக்கிறது

எனது
கண்ணீர்த் துளிகளுக்கு
மழையைப் பார்க்கும் போதெல்லாம்
ரொம்ப பொறாமை-
மேகங்களின்
கண்ணீர்த் துளிகளுக்குள்ள
கட்டறுந்த சுதந்திரம்
தமக்கில்லையே என்று.

மழை
பெய்து கொண்டே இருக்கிறது-

துள்ளும்
இளம் ஆட்டுக்குட்டிகளைப் போல.

ஒரு
ஓட்டப்பந்தய வீரனின்
ஓய்வற்ற பயிற்சியைப் போல.

கருமுகில்களால்
இருண்ட அடிவானம்
குளிர்ந்த மௌனத்தில்
இறுமாந்து கிடக்கிறது-
முத்தொட்டில் தாலாட்டு பாடிய
மூதாட்டியாய்.

அந்த இறுமாப்பை
தன்மீது உமிழும்
ஏளனமாக எண்ணி
கடமுடவென்று
தங்கப் பற்களைக் காட்டி
கடுகடுக்கிறாள்
மின்னல் குமரி.

கூச்சலிடும்
முரசுகள்
சிலசமயம்

தோற்றுவிடுவதும்
ஊமை முரசுகள்
சில சமயம்
வென்று விடுவதும்
அவளுக்கெங்கே
தெரியப் போகிறதது?

மௌனத்தின் சாதனைகள்
மகத்தானவை ஆயிற்றே!

மழை பெய்து கொண்டே இருக்கிறது-

சதா அலைந்து திரியும்
முட்டாள்களின்
சந்தேகங்களைப் போல.

தொடர்ந்து விடியும்
வறுமை மிக்க
ஏழைகளின்
காலைகளைப் போல.

பசியெடுத்து
பாலுக்கழும்
குழந்தையைப் போல-

மழை
பெய்துகொண்டே
இருக்கிறது
இன்னும்...



# சாகாவரம்

ரத்தச் சிலுவையே!
கோப்பை நஞ்சே!
கோட்ஸேயின்
தோட்டாக்களே!

சரித்திரத்தில் பதிந்த
சதிகளே....

எண்ணிய வேலை
முடிந்தும்
உங்கள்
எண்ணம் ஈடேறவில்லையே....

பாவம் நீங்கள்....

சாகவில்லை
அவர்களும்.

சாகவில்லை
நீங்களும்.



# திரவபூபாளம்!

என் காலைகள்
உன் சூட்டோடுதான்
தொடங்குகின்றன...

உன்
கௌரவமான கோப்பைகள்
எனது
நாட்பயணத்தின்
வாழ்த்துரைகள்....

உறக்க ஜாமங்களில்
நீளும்
எனது
விரக்தியின் விழிப்புகளில்
உன்
ஆவி உயிர்ப்புதான்
ஆறுதல் இசைக்கிறது.

நீ
இமய தேசத்துக்கு
அரேபிய சீதனமாக
வந்தவள்தான்-

ஆனால்
அந்த அன்னியுத்தனமெல்லாம்
இன்றில்லை.

நீலாம்பரியின் எதிரியான
நீ
காப்பியல்ல-
திரவ பூபாளம்!



# அழைப்பு...

புயல்களே
வாருங்கள்..

பூக்கள் நடுங்கினாலும்
பாதகம் இல்லை
புதர்கள்
சிதற வேண்டும்.

புல்லாங்குழல்கள்
புலம்பினாலும்
பாதகமில்லை
பேரிகைகள்
அதிர வேண்டும்.

சூரியன்கள்
அஸ்தமித்தாலும்
பரவாயில்லை
சந்திரன்கள்
உதிக்க வேண்டும்.

பறவைகள்
பயந்தாலும்
பாதகமில்லை
பாறைகள்
இடிய வேண்டும்.

புயல்களே
வாருங்கள்....



# சகானா

நீ
விடை கொடுக்கிறாயா?
வரவேற்கிறாயா?

சுகங்களின்
மெத்தனமா நீ?
சோகங்களின்
மௌன விழிப்பா நீ?

உனது நெளிவுகளில்
எவ்வளவு ஆசுவாசம்.

எத்தனையெத்தனை
சப்த கிரணங்கள்.

மாங்கல்ய நேரத்தில்
அரங்கேறும் போது
நீ
சந்தோஷத்தின்
ரகசிய கவிதை

அக்ஷதைகள்
விழும் நேரம்
இமையிலிருந்து உதிரும்
உப்புப் பூக்களை
உன் ஸ்வர விரல்களால்
துடைக்கும் நீ

அந்த மௌன விழிகளின்
நிரந்தரத் தோழி.



# பிதாவுக்கு....

நீ
அணைக்கச் சொன்ன
அடுப்பை
எரிமலையாக்கிவிட்டார்கள்.

சாமானியனின்
வியர்வைத் துளிகள்
உழுத கழனி
கர்ப்பந்தரிக்க
காத்துக் கிடப்பது
எவர் கண்ணிலும்
படவில்லை.

அங்கெல்லாம்
அன்னிய ஆலைகள்
முளைப்பதற்கான
ஆலோசனை நடக்கிறது.

நீ
கோத்துக் கொடுத்த
முத்துமாலைகள்
சைத்தான்களுக்கு
சாத்தப்படுகின்றன.

நீ
கொண்டு வந்து கொடுத்த
பன்னீரை
பன்றிகளின் முதுகில்
தடவுகிறார்கள்.

நீ
பரிமாறச் சொன்ன
அமுதை
சாக்கடைகள்
சாப்பிடுகின்றன.

சுதந்திரத்தை
ஏற்றுமதி செய்துவிட்டு
விலங்குகளை
இறக்குமதி
செய்கிறார்கள்

உனது
நாமரூபங்கூட
நாளைகளுக்கு
கேட்கப் போகிறதோ
என்னவோ...

ஹரே ராம்!



# ஒரு பகலின் ஓரங்கள்...

பெரிய குளத்தடி
குட்டிச் சந்தைக்கு
கிழக்குக் கடலோர
கூடை மீன்கள்
அக்ரஹாரம் வழியே
இறுதி ஊர்வலம்...

வட்டா டம்ளர் மேடைகளில்
வெள்ளையம்மாள்களுக்கும்
கருப்பர்களுக்கும்
கலப்புத் திருமணம்...

காவல் போகும்
கடமை அவசரத்தில்
ஒரு வாலிப வீரரின்
மகளிர் கல்லூரியை நோக்கிய
மன்மதப் பயணம்....

மேற்கு வெண்மஞ்சளின்
மெல்லியப் பின்னணியில்
விண்நீல விரிப்பில்
சிறகடிக்கும் ஓவியங்களாய்
நாரைக் கூட்டம்...

மறுநாள் நடக்கவிருக்கும்
உள்அவைத் தேர்தலில்
தானே முடி சூட
முன்னாள் எம்.எல்.ஏ. கண்ணாயிரத்தின்
தங்கமாரியம்மன் கோயில்
சிறப்பு அர்ச்சனை...

தெற்குத் தெரு
மாப்பிள்ளை வீட்டில்
காலை நடந்த கல்யாணத்துக்கு
வடக்குத் தெரு பெண் வீட்டில்
மாலையில் நடக்கும்
வரவேற்பு வைபவம்...

மணமகள்
வாசல்படியில்
வலதுகால் வைக்க
ஸ்பீக்கரில் ஒலிக்கும்
கண்ணிலே நீரெதற்கு
காலமெல்லாம் அழுவதற்கு...

சூரியக் கைதி
மேற்குச் சிறையில்
சரணடைகிறான்...

வானக் கன்னியின்
வெளிச்ச ஆடைகள்
கொஞ்சம் கொஞ்சமாய் விலக-
அவள் இருட்டு நிர்வாணத்தின்
தேகப் பரப்பெங்கும் முளைக்கும்
மச்ச நட்சத்திரங்கள்.

●

# வருமா?

பசிக்கிறது.

வயிறு சுருங்கி
இடுப்பிலிருந்து
பாவாடை
இறங்குகிறது.

மழையே
வருவாயா?
வேகமாய்
பூமியில் விழுந்து
வெள்ளமாவாயா?

தென்றலே
சீறுவாயா?
புயலாக
மாறுவாயா?

மரங்கள்
சாயுமா?

எங்கள் குடிசைகள்
மிதக்குமா?

பார்வையிட
ஹெலிகாப்டர்
வருமா?

உணவுப் பொட்டலங்கள்
வீசுமா?

பசிக்கிறது.
ரொம்பப் பசிக்கிறது.



# நிசி...

இரவின் இடுப்பு.
மௌனங்களின்
மர்ம மையம்.

பாவங்களுக்கும்
புண்ணியங்களுக்கும்
நீதான் கூடாரம்

காலம்காலமாய்
நீ நடத்தும்
நிசப்தக்கச்சேரிக்கு
நிலவும்
நட்சத்திரங்களும் மட்டும்
விசிறிகள் அல்ல-
நானும்தான்.

உன் குணம்
அமைதி என்று சொன்னாலும்
பல அபாயங்கள்
சரித்திரங்களில்
பதிவாகிக் கொண்டிருப்பது
உன்னால்தான்.

அச்சங்களின்
அச்சகம்
நீதான் என்றாலும்
விடியல் விரைவில் என்ற
நம்பிக்கை நூலின்
பதிப்பகமும் நீதான்!



# கத்தியோடு வா!...

கத்தியோடு வா.

இனியும்
இருட்டின் குடலுக்குள்
கிடப்பதியலாது.

முள்ச்சட்டையைக் கிழித்து
சதைப் பிசிறுகளை நீக்கி
தேன் சுளைகளை
நெய்யில் தோய்த்துக் கொடுக்கும்
தங்க விரல்களை
எனக்குக் காட்டு

என்னிடம்
இருக்கும் உளிகள்
விறகு பிளக்கவல்ல-
சிலை செதுக்கவே
என்பதை
உன்னையன்றி
யார் உரைப்பது?

என்னைப் போர்த்தியிருக்கும்
வெறுமை மண்ணைச்
சீய்த்து எறி.

உன் கைகளால்
எனக்கொரு
ரண சிகிச்சை செய்து
வையக் கைகளில்
என்னை வழங்க
காலமே
ஒரு கத்தியோடு வா.



# ஜாடராக்கினி

நீ
யுகங்களுக்குத் திசைகாட்டி.

சரித்திர உதடுகளில்
ததும்பும் தேனும்
தகிக்கும் தீயும்
உனது இரட்டைப் பிள்ளைகள்.

வேளைதோறும்
உன்னை உணரும்
மானுடத்துக்கு
நீ தரும் தரிசனங்கள்
விசித்திரமானவை...

உன் ஆதிக்கம்
விஸ்தீரணப்பட்டதால்தான்
பல பழைய சூரியன்கள்
பாதித் தேதியோடேயே
அஸ்தமித்திருக்கின்றன.

சிம்மாசனத்தின்
ஆயுளை அதிகரிக்க
அப்பாவிகளின் கண்ணீரை
பன்னீராய்ப் பூசிய மகுடங்கள்
உன் உக்ரமான உதைகளால்
நொறுக்கப்பட்டன.

வீர வீணைகளில்
ரத்த ராகங்கள்
மிதந்தன.

உனது உஷ்ணம்
சோம்பேறிகளின்
கைகளில் கூட
எரிமலைகளை
பிரதிஷ்டை செய்திருக்கின்றன.

நீ
சோதனைக் கூடங்களும்
பேராசிரியர்களும்
பாடப் புத்தகங்களும் இல்லாத
அதிசயப் பல்கலைக் கழகம்.

உன்னிலிருந்து
இந்த மனித வரிசை
கற்றுக் கொள்ளும்
கல்வி - கலைகள்
கணக்கிலடங்கா.

உனது ஒய்வகங்கள்
சிந்திக்கும் ஆற்றல் பெற்ற
மனிதர்களின்
பாழ் வயிறுகள்.

நீ எல்லை மீறும்போது
அறிவே விஷமாகிறது.
பாவங்கள்
கிளைத்துப் படர்கின்றன.
தர்மமும் நீதியும்
தலை குனிகின்றன.

பிரபஞ்ச மூளையில்
புற்று நோயாய்
புரையோடிப் போயிருக்கும்
ராட்சச பிரச்னையின்
பிறிதோர் பெயரே
நீதான் பசியே!

நீதிக்கு மீண்டும்
முதுகெலும்பு வாய்க்குமா?
தர்மத்தின் குரலில்
மின்சாரம் தொனிக்குமா?

தெரு மனிதனுக்கு
நிதிப் பேரரசி
கை கொடுப்பாளா?

அப்படி நேரின்
அவனியின்
காய்ந்த குடல்களில்
ஈரம் விளையும்.

நீ
தீயாகவும்
தாயாகவும் இருந்து
தர்ம தர்பார்
நடத்துவாய்.

ஜாடராக்கினியே!
அந்த
ஜோதியுகத்தின்
பொன்வாசல் திறக்க
தினமும்
போர்க்குரல் எழுப்பு.



# வாழ்வு

அசையாத மலை
ஆடும் அலையிடம்
கேட்டது...

ஏனிப்படி
எப்போதும்
அடித்துப் புரண்டு
ஆர்ப்பரிக்கிறாய்?

அலை சொன்னது...

உன்னைப் போல்
ஒருநாள்
நிம்மதியாக
நிமிர்ந்து நிற்கத்தான்!

மலை பெருமூச்சு விட
அலை ஏன் என்றது.

ஒடுங்கி
உறைந்து கிடக்கும்
என் அவலம் தீர்ந்து
நானும்
உன்னைப் போல்
ஓடியாட வேண்டும்
என்றது மலை.



# தெற்கு ஜன்னவும் நானும்...

எனக்கு
துளி உலகைக் காட்டும்
தெற்கு ஜன்னலின்
சகோதரன் நீ.

வசந்தங்களின்
கொழுந்து மாறாமல்
வளர்ந்த நீ
என் ஆன்ம சினேகிதன்.

என்
வெம்மைகளிலும்
வெறுமைகளிலும்
நீ தந்திருக்கும்
அந்தரங்க ஆறுதல்கள்
கொஞ்சமல்ல.

நீ
தினம் கட்டும்
நிழல் வீட்டில்
ஊர்ப் பிள்ளைகளோடு சேர்ந்து
என் பிள்ளைகள்
முறையாக நடத்தும்
மரப்பாச்சிக் குடும்பம்.

விடிய விடிய
வாய் ஓயாமல்
காற்றோடு
நீ பேசும்
ஊர்க்கதை.

எங்கள்
வயிற்றைக் கழுவ
வறுமையின் பேய்க்கரம்
உன்னைப் பிரேதமாக்கி
ஒரு
பாரவண்டிக்காரனுக்கு
தாரை வார்த்தது-

இவையெல்லாம்
உன் கொழுந்துகளைப் போலவே
ஞாபகமிருக்கிறது
பச்சைப் பசேலென்று.

விரிந்தோங்கி
விணணளந்திருந்த
வேப்ப மரமே...

நீ
பரந்து
கிளைக்கரங்களால்
நிழல் பரிமாறிய
இடத்தைப் பார்த்து
இப்போதும்
இரவுகளில்
ரகசியமாய்
தேம்பிக் கொண்டிருக்கிறேன்
தெற்கு ஜன்னலோடு...
நானும்.



# கடிகாரம்

குழந்தையே!
உனது
விநாடி விளையாட்டுகள்
சுறுசுறுப்பின்
சூத்திரம்.

துளிகளை
வெள்ளைமாக்கும்
சாத்திரம்.

தந்தையே!
உனது
நிமிட வட்ட சேவை
உழைப்புக்கு
உருவகம்.
கடமைக்கு
கருவகம்.

தாயே!
உனது
அமைதியான இயக்கம்
பூமியின்
வரலாற்றுப் பதிவுகள்.

காலக் குடும்பமே!
உலகக் குடும்பங்கள்
உங்களிடம்
நகல் செய்து கொள்ள வேண்டிய
நற்பண்புகள் அநேகம்.

ஆனால்
அவைகளுக்கெங்கே
நேரம் கிடைக்கிறது
இதற்கெல்லாம்?



# அனுமதி இல்லை

பகல்களே...
நீங்கள்
நேத்ர சாகஸம்
காட்ட வேண்டுமெனில்
காட்டிவிட்டுப் போங்கள்.

நான்
கவலைப்படுவதாய்
இல்லை.

ஆனால்
உங்கள்
கண்ணீர்த்துளிகளை
எனது
இரவு ரோஜாக்களின் மீது
குதித்து விளையாட
விடலாமென
கனவு காணாதீர்கள்.

அதற்கு
என் அனுமதி
எப்போதும் இல்லை.



# கர்ப்பம்

வாழ்க்கைப் பகல்களின்
வெம்மையில்
காட்டு நதிகளின்
திடீர் முறிவுகளைப் போல
நீ
எங்கோ
மறைந்து விடுகிறாய்.

சூரியனை
நையாண்டி செய்யும்
உச்சி புஷ்பங்கள்
ஊதாரிக் காற்றின்
சேஷ்டைகளால்
காம்பு சறுக்கி
பாதாளப் புதரில்
விழுவதைப் போல
பகல்களின்
வெளிச்ச ராத்திரிகளில்
எங்கோ
நீ
மறைந்து போகிறாய்.

சந்தன நிலவுகள்
சிந்துத் தென்றல்கள்

வசந்த ரேகைகள்
எதிலுமே
உன் வதனத்தை
காட்ட மறுக்கிறாய்.

ஆனால் -
இருள் மெழுகிய
இரவுப் பாதையில்
உன் ஜதிசலங்கைகள்
திடீரென
கலீரிடுகின்றன.

பொற்சிற்ப
சௌந்தர்ய மதர்ப்புகளில்
புரளும்
உன்
பாத நர்த்தனப்
பண்ணோசைகள்
உலகின்
உறக்கச் செவிகளுக்குள்
நுழைவதில்லை.

அவைகள்...
பசித்து
தனித்து
விழித்திருக்கும்
எனக்கு மட்டுமே
ராக தரிசனம்
தருகின்றன.

புதுப்புது
சாகித்ய ஏணைகளில்
என்னைத்
தாலாட்டுகின்றன.

தேயாத சந்திரன்களோ
மேயும் நட்சத்திரங்களா
எனது
கவித்துவ கர்ப்பம்
கர்வம் கொள்கிறது.

உன்
யக்ஷணி சித்துகள்
விரிகின்றன...



# மெல்லினத்துக்கும் ஒரு நேரம்

இடது தட்டில்
பூக்கள்
குவிந்தன

குனிந்த தட்டு
தரையிலேயே
குந்திக் கொண்டு விட்டது

பூக்களின்
மணம்
கனக்கவே
முள்ளும்
இடது பக்கமே
இறங்கி விட்டது
கெட்டிக்காரத் தனமாக

கட்டி இரும்புகள்
சட்டிச் சில்லுகளாக
புல்லாக
பிஞ்சாகப்
போய் விடவே
எடைப்பெட்டி
காலி.

வலது தட்டின்
வம்ச
உத்தியோக
ஆணவமும்
உருக்குலைந்து
விட்டது

இரும்பு நட்பும்
கரும்புப் பொய்!



# உனது ரோஜாக்கள்

இறைவனே.
அனைத்தும் அருள வல்ல
ஆண்டவனே.

இந்த
மழலைகளுக்கு
நீயே
ஆசானாக இரு.
ஏன் என்கிறாயா..

இவைகள்
உனது
புல்வெளியின்
புதுச்செடிகொடிகள்.

உனது
தோட்டத்துப்
புத்தம் புது ரோஜாக்கள்

உனது
சத்திய சூரியனின்
தங்கக் கிரணங்கள்
இவர்கள் மீது
படியட்டும்.

உனது
இதய வான
அருள் மழை
இவைகள் மீது
பொழியட்டும்.

உலகிலேயே
உன்னதம் மிக்க
அழகு
இவைகளிடம் மிளிர

மனச்செழுமை
மதர்த்துக் கொழிக்க
இவைகளின்
ஒவ்வொரு
மொக்கையும்
உனது
பூந்தென்றலால்
புதுப்பித்துக் கொண்டே இரு.

இவைகளின்
இந்த
நம்பிக்கை
ததும்பும்
இமைகளின்
எதிர்காலத்தை
வெளிச்சங்களிலேயே
மின்ன வை.

ஏன் என்றால்
இவைகள்
உனது ரோஜாக்கள்.

●

# இப்போதெல்லாம்....

இப்போதெல்லாம்
எனது
உதயங்கள்
எனது
அஸ்தமனங்களைப் பார்த்து
ஆயாசப்படுவதில்லை.
பரவசமே கொள்கின்றன.

முட்கள்
பயிரிடப்பட்ட
ஒற்றையடிப் பாதையில்
நடக்கமட்டுமல்ல-
நடனமாடவும்
கற்றுக் கொண்டு விட்டது
என் இதயம்.

ஒரு
சௌந்தர்ய லாகிரியோடு
என்
கண்ணீர் கூட
புன்னகைக்கத் தொடங்கிவிட்டது
இப்போதெல்லாம்.



# மரபுக் கவிதைகள்

● *சங்ககால இலக்கியங்களையும் சிலப்பதிகாரம், திருக்குறள் போன்றவைகளையும் படிக்க உங்களுக்கு உந்துசக்தியாக இருந்தது எது?*

■ *இலக்கியத் துறையில் என் திறனை வளர்த்துக் கொள்ள துணைநின்றவை அண்ணாவின் எழுத்தோவியங்களும், புரட்சிக் கவிஞரின் கவிதைகளும் என்பதை மறக்க முடியாது.*

*கவிஞர் சுரதா, கவிஞர் மாவெண்கோ (வயலூரார் சண்முகம்) கவிஞர் கா.மு. ஷெரீப் ஆகியோருடன் நெருங்கிப் பழகும் மாணவப் பருவத்து சூழ்நிலையும் உந்து சக்தியாக இருந்தது என்பதை இப்போது நினைத்தாலும் நெஞ்சு இனிக்கிறது!*

**கலைஞர் மு. கருணாநிதி**

('கலைஞர் முதல் கலாப்ரியா வரை' - கோமல் சுவாமிநாதன் - இளையபாரதி ஆகியோர் தொகுத்த சுபமங்களா நேர்காணல்கள் திரட்டு நூலில். முதற் பதிப்பு 1997)

## காவிரித்தாயே!

அன்னை என்பவள் நீயன்றோ?
ஆருயிர் அனைத்தின் தாயன்றோ?
பொன்னுயர் தியாக வாழ்வுக்கே
புவியில் நீதான் முன்னோடி!

ஒவ்வொரு உதய விநாடிகளும்
உன்றன் பணியின் திருவிழாதான்!
திவ்விய பவித்ர அர்ப்பணமே
தேவியுன் சீல உயிர்மூச்சாம்!

கொள்வ தனைத்தும் கொடுக்கின்றாய்!
கொடுப்பதால் களித்தே சிரிக்கின்றாய்!
அள்ளிய தனைத்தும் விடுக்கின்றாய்!
ஆன்மப் பூவாய் நுரைக்கின்றாய்!

தரிசை; பாழை முத்தமிட்டே
தாவர சொர்க்கம் ஆக்குகிறாய்!
பரிசு; உரிமை கேட்பதில்லை;
பசியோ துயரோ காட்டவில்லை!

நீல முகிலாம் வள்ளலவன்
நினக்கே வழங்கும் பிரசாதம் -
கால முழுதும் உயிர்காக்கும்
"காவிரி ரூப" தண்புனலே!

சத்தியம்; நீதி கரைகளுக்குள்
தர்மமே நீயாய்ப் பிறந்ததுபோல்
நித்தமும் பொங்கிப் புரள்கின்றாய்!
நின்னில் நெடுந்தவம் நடக்குதம்மா!



# நிழல்

மங்கையின் ஆசை போலோ
மற்றுமவள் ஆடை போலோ
அங்கங்கே பேச்சை மாற்றும்
அரசியல் வணிகர் போலோ
கங்குலின் சேயே உன்றன்
கருநிறம் மாற்ற மாட்டாய்!
திங்களில் வசித்துங் கூடச்
சிறிதும்நீ மாற வில்லை!

தைலியாம் என்றன் புதல்வி
தம்பியாம் முத்து வுக்கே
கைவிரல் நிழல்க ளாலே
காட்டுமான், எருமை, யானை
தொய்செவி நாய்கள் யாவும்
சுவரினில் படங்க ளாகச்
செய்திட்டாள்! அப்போ தோநீ
சிரித்திட்டாய் கலையின் ஒளியாய்!

இடம்வலி, காலம் தேர்ந்தே
எதிரியைத் தாக்கப் பதுங்கும்
அடல்மிகு மறவன் போலே
அந்தியில் ஏற்றி வைக்கும்
சுடர்விளக்குக் காலின் கீழே
சொகுசாகப் படுத் திருப்பாய்!
மடம்கொண்டார் வஞ்சங் கொண்டார்
மனமெல்லாம் உன்றன் பண்ணை!

அளி எனும் வண்டின் மேனி
அழகுக்கே இரவல் போவாய்!
கிளிஎனும் கன்னி கூடக்
கிழவிபோல் அஞ்சி, வயிற்றில்
புளியினைக் கரைக்கும் பேய்கள்
புரளியைக் கூற நீதான்
எளிதிலே உதவு கின்றாய்!
இதிலென்ன உனக்கு லாபம்?

நிலவினில், அசதி யாலே
நித்திரைச் சுகத்தைத் தேடும்
உலகத்தைக் காவல் செய்யும்
உத்தியோகம் உன்னைச் சேரத்
தொலைவினில் கோபு ரத்தின்
தோள்களில்; நிசிம ணக்கும்
மலர்களின் உதட்டில் எல்லாம்
மருவியே துணையிருப்பாய்!

தொழுகின்றோர் பக்திக் கரங்கள்
தொடுக்கின்ற மாலை; வீணை
பழகிடுமோர் நங்கை; ஏரிப்
படகதன் தூக்கம்; தேம்பி
அழுகின்றோர் கண்ணீர்த் துளிகள்
அத்தனையும் சித்த ரிப்போர்
"நிழல்"எனும் உன்னை யேதான்
நெஞ்சிலே தேனாய்க் குடிப்பார்!

வான்கதிர் கிழக்கி ருக்க
வளர்ந்திட்டே தடிக்கும் நீதான்,
ஊன்பொதி பொருள்மேல் கதிரோன்
உலவினால் புள்ளி யாவாய்!
"நான்" எனும் பன்மை தோன்றும்
பான்மையை ஒது விக்கும்
பள்ளியும் நீயே தானோ?

நெருப்பிலே தீய்வ தில்லை!
நீரிலும் நனைவ தில்லை!
விருப்பில்லை; வெறுப்பும் இல்லை!
விழலுக்கே பன்னீர் பாய்ச்சி
இருப்புதை தானே தோற்கும்
இறுமாப்போ துளியு மில்லை!
துருப்பிடித்த மதங்கள்; சாதித்
துடுக்கேதும் உன்பால் இல்லை!

கொடுக்குயர்த்தும் தேளின் நிழலில்
கொடுவிஷம் உண்டா? நேசம்
கெடுக்கின்ற பாவி நிழலில்
கீழ்ப்புத்தி உண்டா? கிளையை
'வெடு'கென்றே முறிக்கும் குரங்கின்
விஷமந்தான் நிழலில் உண்டா?
தடுக்கிவீழ் பெண்ணின் நிழலில்
தப்புண்டா? நீயே சொல்வாய்!

நெளிவுக்கும்; குறுக லுக்கும்;
நேரற்ற கோண லுக்கும்
ஒளிவாழ்வில் இடமே இல்லை!
உனக்கவையே வாழ்வாம் அன்றோ?
வெளிச்சத்தின் கறையே! நிழலே!
வெம்மையே சூழ்ந்த போதும்
குளிர்ச்சியே தருவாய் நீயே
குடைக்குள்வாழ் தருமம் ஆகும்!

●

# வஸந்தமே வா! வா!!

பூக்களின் குடும்பம் எல்லாம்
புதுவிழா எடுக்கும் நேரம்!
ஈக்களின் படை திரண்டே
இலவச விருந்த ருந்தும்
நோக்கிலே ரீங்கா ரிக்கும்!
நுரைக்கின்ற வாலி பத்தின்
ஊக்கத்தில் அனல்வி ழிப்பு!
உயிர்க்கூத்து! அழகின் சிலிர்ப்பு!

தடிக்காத வெயிலில் தோயும்
தளிர்களில் கவிதை குந்தும்!
படிக்காத நெஞ்சி னைப்போல்
பழஞ்சருகுக் குப்பை யாகும்!
கடிக்காத கரும்பைப் போலக்
காதலின் தனிமை ஏங்கும்!
முடிக்காத ஒருக தைக்கு
முன்னுரையோ வஸந்தத் தேதி?

தைநெல்லோ களஞ்சி யத்தில்!
தங்கநிற மேனி கொண்டு
கைப்புக்கே எதிரி யாகும்
கனிக்குலமோ செழுங்கி ளையில்!
வைகாசி மஞ்ச ளுக்கோ
வைரமும் ஈடே இல்லை!
மை காட்டா வானம்! - எல்லாம்
வஸந்தத்தின் பாகுப் பரிசு!

ஆற்றுநீர் ஏழை யைப்போல்
அங்கங்கே ஒண்டி ஓடும்!
ஊற்றுநீர் மேலெ ழுந்தே
ஊர்க்குடத்தில் கங்கை யாகும்!
காற்றுக்கும் கோபம் இல்லை!
கலைகளுக்கோ தூக்கம் இல்லை!
ஏற்றுகின்ற திருவி ளக்கோ
இல்லத்தின் களிப்பைப் பேசும்!

உதயங்கள் கனவுச் சுளையின்
ருசியோடே வந்து கொஞ்சும்!
இதயங்கள் ஓவி யத்தின்
ரேகையில் மினுமி னுக்கும்!
விதிகிறுக்கும் வாழ்வுக் கோல
விளையாட்டோ நிழலின் மெத்தை!
பதியன்களாய் நினைவுகள்! பருவப்
பளபளப்பே! வஸந்தமே வா! வா!!



# எதுவோ?

இதயத்தின் புல்லரிப்பை
இன்பத்தின் போதைதன்னை
அதிசய வியப்பைஎல்லாம்
அளிப்பதுவும் எதுவோ? எதுவோ??

உதிர்சருகு பழுப்பினூடே
ஒடிவந்தே உறவுபேசி
சதிராடிச் சரசம்செய்யும்
தண்ணிளம் தென்றல்காற்றா? - கண்ணே!
தமிழ்தரும் தேனின்ஊற்றா?

கனவுக்குள் கனவதாகக்
கண்பசிக்கே அழகையூட்டி
நனவுக்கும் மயக்கமீந்தே
நகைப்பதுவும் எதுவோ? எதுவோ??

முள்வீட்டுக் குள்ளிருந்தே
மோகனச் சிரிப்புதிர்த்தே
கள்ஈட்டும் வண்டினத்தின்
காதலால் கிளுகிளுக்கும்
கவின்மேனி ரோஜாப்பூவா? - கண்ணே
காந்தவெண் நிலவுத்தட்டா?

●

# பிறையே! பிறையே!

''பிறையே! பிறையே!! ஒரு சேதி
பேச விழைகிறேன் உன்னிடத்தே!
சிறியேன் என்றே எள்ளாமல்,
செவியில் என்மொழி கொள்வாயோ?''

''பிள்ளாய்! பிள்ளாய்!! சொல்வாய், நீ!
பெரியவன் சிறியவன் என்பது தான்
உள்ளம் என்பதைப் பொறுத்ததுவாம்!!
உருவம் என்பதோ அடுத்ததுதான்!''

''நிலவுப் பிஞ்சே! நீயும் தான்
நிதமும் வளர்ந்து மாறாமல்,
இலகிடும் இந்த உருவோடே
என்றும் இருந்தால் அழகன்றோ?''

''ஆசைக் குழந்தாய்! உன் கேள்வி!
அதிசய அறிவின் முதற் கேள்வி!
தூசாய், இருளாய் இருந்தாலும்
தூளியும் வளர்தல் வேண்டுமடா!

''வளர்ச்சி'' என்பதே வாழ்வாகும்!
வாழ்வின் கதையே அதுவாகும்!
''தளர்ச்சி'' என்பதும் ஒரு வகையில்
''சாவாம் வாழ்வின்'' முளைகளடா!''

"ஏதோ பேசி மழுப்புகிறாய்!
என்னைப் புரிந்தும் குழப்புகிறாய்!
தீதே விளைத்திடும் 'வளர்ச்சி'யினைத்
தெரிந்தே தேடிச் செல்கின்றாய்!

வளர்ந்து வளர்ந்தே தேய்கின்றாய்!
வளர்வதால் அன்றோ தேய்கின்றாய்!!
'களங்கம்' உனக்கு வருவதுவும்
கணக்காய் நீயே வளர்வதால் தான்!

ஆற்றைக் கடக்கும் படகே போல்-
ஆரஞ்சுப் பழத்தின் சுளையே போல் -
ஏற்றே ஆடும் பந்தே போல்,
ஏனோ வடிவை மாற்றுகிறாய்?"

"வளரும் எதற்கும் கறையுண்டு!
வாழும் எதற்கும் குறையுண்டு!
வளரும் போதும் வாழ்கின்றேன்!
மாறும் போதும் வாழ்கின்றேன்!

மிதக்கும் படகின் அமைதியினை;
மேவும் சுளையின் ஒட்டுறவை;
குதிக்கும் பந்தின் விசைத்திறனைக்
கொண்டால் வாழ்வே வெற்றியடா!".

"நன்று! நன்று! குளிர் மதியே!
நயமாய்ச் சொன்னாய் புது மதியை!
குன்றிக் குறைந்தே தேய்வதுவும்
கொள் புது வாழ்வின் வாய்ப்புக்கே!"



# ஒண்டிக்குயில்!

ஒண்டிக் குயிலொன்று கூவுகிறது! - தினமும்
ஊமை இருளுக்குள்ளே கேவுகிறது!
அண்டி அணைத்திடவோ நாதியின்றி - தன்னுள்
அழுத கண்ணீரிலும் மீதியின்றி
ஒண்டிக் குயிலொரன்று கூவுகிறது!

வசந்தப் பூஞ்சோலை நிழலுமில்லை! - சிறிதும்
வான நிலவுகளைத் தழுவவில்லை!
கசந்த கனவுகளை வர்ணமிட்டே - தனது
காலடிப் பாதையில் சொர்ணமிட்டே,
ஒண்டிக் குயிலொன்று கூவுகிறது!

பாமர சமூகத்தின் வழக்குரைக்கும்! மேட்டு
பணக்குலத் தொப்பைகளின் சழக்கறுக்கும்!
காமறு சத்தியத்தைத் துணைக்கழைத்தே - தெய்வ
கருணையாம் நித்தியத்தை இணைத்திழுத்தே -
ஒண்டிக் குயிலொன்று கூவுகிறது!

நொண்டி நொடிக்குமொரு மனம் நுழையும்! வீர
நோக்கு நடைபடைக்கக் கனல்தூவும்!
சண்டிக் கழுதைகளைச் சாடிடவும், தர்மச்
சாத்திரப் பழுதுகளை மூடிடவும்,
ஒண்டிக் குயிலொன்று கூவுகிறது!



# நாளை...!

துணரும்; இணரும்; 'நாளை' துளிரும்; கொழுந்தும்
துளித்துளி யான 'நாளை'களே யாகும்!
உணர்வில்; கனவில்; உயிர்ப்பில் 'நாளை!'
உதிரமே பாய்ந்து பெருகுக! ஓடுக!

பற்றை; வரவை பாக்கி நிலுவையைப்
பழங்கணக் காக்கி மூடி வைப்போம்!
நெற்றி சுருக்கா'நாளை' என்னும்
நிகர லாபமே நம் கணக்கி லேறுக!

பாளைக் குரும்பையே 'நாளை' – தேங்காய்!
பானை அரிசியே 'நாளை'யச் சோறு!
வாளை மீன்விழி நங்கையின் நாணமே
வரும்மண அறத்தின் 'நாளை'யக் கற்பு!

தோண்டா ஊற்றுகள்; தவழாக் காற்று;
தோற்கா வெற்றிகள் 'நாளை'யே அன்றோ?
ஆண்டவன் தோட்டமும் 'நாளை'யே ஆகும் - !
ஆயிரம் கனவின் அன்னையும் 'நாளை'யே!

ஊமை யாழினில் 'நாளை'க் கேனும்
ஒருபுதுப் பாடல் எழுந்து முழங்குக!
ஆமை நடையில் 'நாளை'க் கேனும்
அரிமா நடையின் ஆவேசம் ஏறுக!

முக்காடு கிழிப்போம்! படுக்கையைச் சுருட்டுவோம்!
முளைத்தெழும் ஆயிரம் சூரியன்களை எல்லாம்
எக்காளம் ஊதியே எதிர்கொள எழுவோம்!
இனிய நாளை 'நாளைகளே' வருக!



# கவிபாடு!

ஆசைக் கண்மணியே!
அன்புத் திருவிளக்கே!
வாசப் புதுமலர்கள்
மணமவிழ்க்கும் சோலையிலே

வீசும் இளங்காற்றே!
வீரக் கவிபாடு!
பேசுமென் புகழெல்லாம்
பெருங்குரலில் கவிபாடு!

முச்சங்கம் அழிந்தாலும்
மூவேந்தர் மறைந்தாலும்
இச்சகத்தை யானாலும்
எத்திறனும் அழியாதே!

கச்சை வரிந்துகட்டிக்
கார்க்குரலில் கவிபாடு!
நச்சுதோய் வேல்நிகர்த்த
நற்சொல்லால் கவிபாடு!

என்மகுட மணியொளியை
இன்றிழந்துத் தவிக்குமொரு
துன்பத்தைக் காண்பதனால்
துடிதுடிக்கும் உன்நெஞ்ச

அன்பொன்றே போதுமடா!
ஆயுதத்தின் வரிசையெலாம்
என்செய்யும் இளைஞன்நீ
எழுப்புகின்ற கவிப்படைமுன்?

தாய்ப்பற்று மொழிப்பற்றுத்
தாயகத்துத் தனிப்பற்று
வாய்ப்பற்றுப் போகாமல்
வாய்திறந்தே கவிபாடு!

காய்பற்றிக் கனிவெறுக்கும்
கசடுகளும் துள்ளியெழத்,
தீப்பற்றும் காற்றாகத்
தீந்தமிழில் கவிபாடு!

முடிதூக்கும் வேந்தரெல்லாம்
முன்னாளில் என்றன்இரு
அடிதூக்கித் தொழுமாறு
அரசுகொலு வீற்றிருந்தேன்!

படிதூக்கும் புகழ்சுமந்தே
பாராள வந்தவள்நான்!
கொடிதூக்கிக் கவிபாடு!
கோலுயரக் கவிபாடு!

மானமுதால் மகிழ்கின்ற
வரிப்புலிபோல் பொழுதனைத்தும்
நானமுதால் நலமென்று
நகைசிந்திப் பார்த்திருக்கும்

ஈனமதிக் குறும்பர்களின்
இறுமாப்பை நொறுக்குதற்கே
வானமதிர் இடிக்குரலில்
வாடாமல் கவிபாடு!

இல்லாமை போக்கிடவும்
இருநிதியம் சிலர்பாலே
நில்லாமை ஆக்கிடவும்
நீள்புவியில் தமிழ்ச்சேய்கள்

நல்லாண்மை வலிவுற்றே
நாடோறும் மேலோங்கி
வல்லாராய் நல்லாராய்
வாழ்ந்திடவே கவிபாடு!

கல்தோன்றா மண்தோன்றாக்
காலத்தின் முன்தோன்றி
நெல்தோன்றும் கனிதோன்றும்
நீர் நிலத்தின் பரப்புனைத்தின்

இல்தோன்றும் அமுதாக
இன்றுவரை, இனிஎன்றும்
புல்தோன்றும் பூஇளமை
பொலிவுடையோன் புகழ்பாடு!

●

# பயணம்!

வையப் பாலையின் சுனைதேடி
வாழ்வுச் சாலையின் முனைநாடி
மயங்கி மயங்கி நடக்கின்றேன்! - நான்
மாயப் பயணம் தொடர்கின்றேன்!

நெய்யோ, திரியோ காணாத -
நெஞ்சே தீபத் தூணாக-
நீளும் நீளும் தொலைவழியில் - நான்
நிதமும் நிதமும் அலைகின்றேன்!

உண்ண உண்ணப் பசியேற்றும்
உறங்க உறங்கத் துயில்தலைக்கும்
உடலே உயிரின் சுமையாக - நான்
ஓடி ஓடிக் குமைகின்றேன்!

எண்ண எண்ணக் கணக்குகளும்
எள்ளும் விதியால் பிணக்காத
எச்சச் சொச்ச மிச்சங்களைப் - புது
ஏட்டில் எழுத விரைகின்றேன்!

காலம் என்னும் பழிகாரன்
கையில் சிக்கி அழிந்தாலும்
கல்லும் முள்ளும் இடறிடினும் - வெங்
கனலில் புனலில் நடக்கின்றேன்!

ஓலம் எல்லாம் யாழ்ப்பாட்டாய்
ஊமைக் கனவும் வாழ்வாக
ஒண்டியா(ய்) ஒரியாய் நடக்கின்றேன்! - என்
உள்ளும் புறமும் நடக்கின்றேன்!

அசையா உதட்டில் சுதியெழுப்பும்
ஆடாக் கால்களில் சதிரெழுப்பும்
ஆத்மக் காதலி கரம்தழுவப் - பெரும்
ஆசை மோத விரைகின்றேன்!

இசைவோ, முறிவோ எதுவரினும்
ஏற்றுப் போற்றுக் குதூகலிக்க
இரவும் பகலும் நடக்கின்றேன்! - நான்
எட்டித், தாவி நடக்கின்றேன்!

●

# விடை!

நீரிலே பூத்த பூவும்;
நிலத்திலே பூத்த பூவும்;
ஏறிடும் கொடியில் - கொம்பில்
இமைத்திடும் பூவும் - யாவும்

பாரிலே - மக்கள் வாழ்வுப்
பண்ணையில் விளைத்த ‘காதல்
வேரிலே’பூத்த உன்னால்
வெறும்பூவே ஆகும் அன்றோ?

பெய்கின்ற மழையைப் பார்த்தே
பெருவியப் பெய்தி நீதான்
“வெயிலோன் குளிக்கும் போது
விழுகின்ற தண்ணீர்!” என்றாய்!

மைஇருள் கீறிப் பாயும்
மத்தாப்பு மின்னல் கண்டே
“தெய்வத்தின் சிரிப்பு!” என்றாய்.
சிந்தித்தேன், சிரித்துக் கொண்டேன்!

வானத்துப் பிறையைப் பார்த்தே
வருத்தந்தான் குரலில் தோய
“எனப்பா சாமி விளக்கு
இப்படி உடைந்து மூளி

ஆனது?'' என்று என்னை
அதிசயக் கேள்வி கேட்டாய்!
நானென்ன பதிலைச் சொல்வேன்?
நகைத்திட்டேன்; திகைத்து நின்றேன்!

குங்குமச் சிமிழின் மூடி;
குண்டூசி; கூந்தல் நாடா;
சிங்கத்துப் பொம்மை; சாவி;
செருப்புத்தோல் பூக்கள் – எல்லாம்
வங்காளப் பட்டுத் துண்டில்
விளையாட அடுக்கி வைத்தாய்!
தங்கமும் கல்லும் ஒன்றாய்த்
தரம்போடும் ஞானி தோற்றான்!

'உயிரற்ற' மரத்தின் பொம்மை
உறுப்புகள் உடையும் போது
துயருற்றே துடிக்கின் றாய் நீ!
தொல்லைகள் வறுமை வாட்ட
'உயிர்பெற்ற' மனிதப் பொம்மை
உயிரையே உடைக்கும் போதும்
செயலற்றே நிற்கும் மாந்தர்
சிறுமையை என்ன சொல்வேன்?

கண்ணாடி முன்னே நின்றேன்:
'கவலையின் இருட்'டைக் கண்டேன்!
பின்னாலே வந்த நீயோ
பிடித்தென்னை நகர்த்தி விட்டே
முன்னாலே நின்றாய்! அடடா!
முற்றிலும் 'வெளிச்சம்'! 'இன்பம்'!!
கண்ணாடி செய்யும் இந்தக்
கள்ளத்தைக் குறும்பைப் பாரேன்!

முக்கனி பிழிந்த சாறா?
முதிர்ந்திடாத் தெங்கின் நீரா?
மிக்கதோர் இசையில் வல்லான்
மீட்டிடும் சொர்க்கப் பாட்டா?
இக்கணக்கால் உன்றன் மழலை
இனிமையை அளக்க லாமோ?
திக்கெல்லாம் மணக்கும் என்றன்
செந்தமிழ்ச் சொத்தே அதுதான்!
●

# பாம்பு!

வேலின் முகம் போல; - எரியும்
விளக்கின் சுடர் போல;
நீலச் சாந்தெடுத்தே - பொட்டு
நெற்றியில் இட்டிருந்தேன்!

முட்டை தெறித்தது போல் - பலா
மூசை அறுத்தது போல்,
பொட்டும் சிதைந்ததென்ன? ... உன்
பொன்னுடல் பதைப்ப தென்ன?

சித்திரக் கொடி போட்டப் - பழஞ்
சேலையை உடுத்துவிட்டேன்!
கொத்துப்பூ புதுப் புடவைப் - பெட்டிக்
கொக்கி விட்டு வந்த தென்ன....?

சந்தனச் சீப்பெடுத்தே - நெளியும்
சர்ப்பம் போல் சடை முடித்தேன்!
அந்தச் சடை பிரித்தே - நீ ஏன்
அவசரமாய்க் கொண்டை யிட்டாய்...?

வாசமிகு மல்லிகையை - குழலில்
வனப்பாகச் சூட்டி வைத்தேன்!
பேசாமல் மல்லிகைப்பூ - மொட்டாய்ப்
பின்னுமிதோ ஆனதென்ன?

அரைத்த மாவும் கரைக்க வில்லை! - அட
அந்தி விளக்கேற்ற வில்லை!
குரைத்த நாயின் வாயடக்கி - மேனி
குலைந்திடவே ஓடி வந்தாய்!

முல்லைப் பூங்கொடி! கீழ் - விழுந்தே
முள்ளதனில் கிடந்த தென்றாய்!
நல்லபடி அதற்கொரு - கொம்பை
நட்டு விட்டு வந்தே னென்றாய்!

அப்போதொரு பெரும் பாம்பு - சீறி
ஆடி வந்தே துர்த்திற் றென்றாய்!
தெப்பலாக வியர்த்த தென்றாய்! - நெஞ்சுத்
திடுக்கிட்டே போனேனென்றாய்!
முல்லைக் கொடி நீயடியோ! - ஆனால்,
முள்ளதிலே படரலாமோ-?
பொல்லாத' பாம்ப' துதான் - பருவம்
பூவையர்க்கே, உண்மையடி!



## வழி.....!

கோயில்கள் ஆயிரம் உண்டென்பார்!
கூடை கூடைய்ாய்க் கதை படிப்பார்!
ஆயினும் இறைவா, நீ வாழும்
ஆலயம் என்பதும் ஒன்றேதான்!
உண்ணவும் உடுக்கவும் கதியின்றி
உறுத்தும் வறுமைப் பொதி சுமந்து;
எண்ணம் அனைத்தும் உனைமொய்க்க
இருப்பார் இதயமே உன் கோயில்!

இன்னல் உற்றோர்; தாழ்ந்தவர்கள்
இடறி விழுந்தோர் இருப்பிடமே,
மின்னும் உன்றன் திருவடிகள்
மேவிப் பதியும் திருப்பதியாம்!
எத்துணைத் தாழ்வாய் நான் தினமும்
இறைவா உன்னைப் பணிந்திடினும்
அத்துணைப் பணிவும் தெரிகைகளும்
அடவியில் சிந்திய நிலவன்றோ?

உன்றன் திருவடித் தாமரைகள்
உவந்தே மலரும் எளியோரை!
என்றன் பணிவும் பிரார்த்தனையும்
ஏனோ அண்டவும் முடியவில்லை
எந்த ஏழைப் பாழையுடன்
இறைவா நீயும் வருவாயோ
அந்த எளியோர் நிழலதையும்
அகந்தை யால் நான் அணுகேனே!

அடைத்திடும் கதவே இல்லாத
ஆலயம் இது வெனச் சொல்வது போல்
நொடித் தோர் இதயக் கொலுவமர்ந்தாய்
நுவலரும் அருளின் பேரிறைவா!
ஆல் போல் கைகளால் அரவணைத்தே
அடைக்கலம் தந்திடும் அருந் தோழா!
கால்கள் ஓடிய நடந்திடினும்
கனவிலும் உன்வழி காணேன், நான்!

●

# என் இரவு...

புதுக்கனவு சிலிர்க்கவரும்
பூந்துயிலின் ஓரம்
மதுக்கலசம் நுழையவரும்
வண்டெனவே சுழன்று

உயரத்தில் உள்மனத்துப் பறந்தலையும்
உன்மத்துப் பண்ணில்
துயரமெல்லாம் தூளாக்கத்
துள்ளிவரும் கவிதை!

சுற்றிவரும் வெற்றுலகம்
தொல்லைதர வில்லை!
முற்றிவரும் தவத்தமிழின்
முதியசுவை யன்றி!

பித்துமனம்; பிஞ்சுமனம்;
பேதைமனம்இல்லை!
கொத்துமனம்; கொக்குமனம்;
குரங்குமனம் இல்லை!

சத்திரத்தில் தங்கவரும்
தரித்திரனைப் போல
நித்திரைக்குள் நிழலிட்டே
நீங்கிவிடும் நினைவைக்

கொஞ்சி வரும் அருவியெனக்
குளுகுளுக்கும் நடையில்
நெஞ்சிருத்தி ஒளியிட்டு
நிருத்தியத்து சுதியில்

எழுதுகிறேன் கவிதையிதை
இளங்கொழுந்தே கேளாய்
அழுதழுதே பழுதடைந்த
அழுக்கடைந்த மனசில்

பூத்தருளிக்; காத்தருளிப்
புதியஉரம் தந்து
கூத்துபல ஆடிநிதம்
கோடிவித்தை செய்யும்

வையமெல்லாம் மெய்ப்புளகம்
வளரவணங்கித் துதிக்கும்
தையட்கு நாயகியாம்
தாயவளைத் தொழுதே

எழுதுகிறேன்! எழுதுகிறேன்
இக்கவிதை மானே!
எழுந்துவிடு! விழித்துவிடு!
இக்கணத்தில் வாழ!

கருமுகிலின் படைதிரண்டே
கண்ணறியா வானில்
பெருகிவரும் முதுமழைக்குப்
பேரிகைகள் தட்ட

இளைத்திருந்த இளங்தென்றல்
ஏறும் பெருங் காற்றாய்
களைத்தறியா மறவன்எனக்
கர்ஜனைகள் செய்ய

கவ்வுகின்ற வறுமையதாய்
காலமகள் புதிராய்
எவ்வுகின்ற இவ்விரவில்
எழுதுகிறேன் கவிதை

கலைத்தறியா அரைத்துகிலும்
கவமெனவே நீக்கி
நிலைத்தசுகம்; நீண்டசுகம்;
நிஜச்சுகமும் இதுவே!

தொட்ட இடம்; பட்ட இடம்;
தோன்றும் இடம் எல்லாம்
கட்டுடலின் பட்டுடலின்
காமசுக மதுவே!

என்றுபல போதைமொழி
இதழடங்க உளறி
தென்றலுக்கு கைக்கடனாய்
தூமணத்தை ஈயும்

புள்ளிநிகர் நெருப்புவிழி
புகைவத்தி நாண
கள்ளிருக்கும் முல்லைக்குலம்
கட்டவிழந்து நசுங்க

சர்க்கரையாய்க் கற்கண்டாய்க்
செங்கரும்பாய் மாறி
இக்கரையாய் அக்கரையாய்
இருஇதயம் ஆக்கி

'வாழ்க்கை இது! வாழ்க்கையிது!'
வாழிமஞ்சம்! என்றே
வேட்கையெலாம் தீர்ந்திடவே
விதியமைக்கும் பாதை

நோக்கிநடை போடுகின்ற
நொங்குமனக் காதல்
தேக்கிவரும் மணக்குயில்கள்
தேடுசுவை இரவை

பொன் இரவாய்த், தேன் இரவாய்;
பூவிரவாய் மாற்றி
என் இரவாய்க் கவிஇரவாய்
எழுத்திரவாய்ச் செய்தே

எழுதுகிறேன்! எழுதுகிறேன்
இக்கவிதை சேயே!
அழுததுளி இனி எனக்கே
அமுதகவித் தேனே!

●

# எது?

இன்பமெனின் எதுவாகும்? - அதுதான்
எங்கிருந்து ஓடிவரும்?
பொன் சேர்த்தால், புகழ் சேர்த்தால் -ஆனந்தம்
புரண்டிடுமா வெள்ளமென?

கண்குளிக்கும் அழகுக்குள் - யாழிங்
கானத்தில் அதுவுண்டா?
பெண் அளிக்கும் அரவணைப்பில் - இன்பம்
பீறுவதும் உண்மையதா?

பளபளக்கும் பட்டுடையில் - சுமக்கும்
பவுன்வைர நகைகளிலே
கிளுகிளுக்கும் மதுவகையில் - இன்பம்
கிளர்த்தெழுதல் மெய்தானா?

பகவானின் பேர்பாடும் - பக்திப்
பஜனைகளில் அதுவுண்டா?
தகவற்ற போர்வெறியில் - எல்லைத்
தாண்டுதலில் அதுவுண்டா?

எப்போதும் இவைகளிலே -அந்த
'இன்பந் தான் நிலைத்ததிலை
ஒப்பற்ற தியாகத்தில் - அன்பின்
ஊற்றுகளில் அது பிறக்கும்!

நேருபிரான் சொன்னதுபோல் - வீர
நிருத்தியமே இன்பவிதை!
காருலவும் மலைஉச்சி - ஏறிக்
காண்பவரே மகிழ்வாளர்!

கீழ்கீழே மண்மடுவில் - துளியாம்
கேடுமிலை வாழ்வதற்கே!
சூழ்கின்ற பனிதின்றே - கதிரோன்
சுடர்வதுவும் மலைத்தலையில்!

அச்சத்தால் குனியாமல் - தாவும்
ஆபத்தைப் பணியாமல்
துச்சமாய் மிதித்துவிட்டால் - இன்பம்
துள்ளிவந்தே உனைத்தழுவும்!



# ஆத்மாவின் சாகசம்!

வையத்தை வளர்த்தெ டுக்கும்
வாழ்வியல் துறைய னைத்தும்
கையெடுத்துப் போற்ற கின்றக்
கலை எது? 'விமர்சன' ந்தான்!
மெய்யதாய் முன்னேற் றத்தை
விழைபவர் யாவ ருக்கும்
பொய்மயக்கம் தெளிவிக் கின்ற
பொதுமருந்தும் விமர்சனந்தான்!

கலைகளாம் நாடகத்தின் -
காவிய, இலக்கி யத்தின் -
சிலை அமைக்கும் வித்த கத்தின் -
தீட்டிடும் ஓவி யத்தின் -
அலையெனப் பொங்கிப் பாயும்
அரசியலின் - திரைப்ப டத்தின்
'நிலைகளில்' எல்லாம் 'புரட்சி'
நிகழ்வதே விமர்சனத்தால்!

நிறைவுறும் புலமை ஏந்தி
'நிழல்ஒளி' காணு கின்ற
அறிஞனைப் புகழ்ந்து யாத்த
அனடோல் பிரான்ஸி சொன்னாள் :
''அரும்பெரும் விமர்சகன் தன்
ஆத்மாவின் சாக சத்தைப்
பெரும்பெரும் படைப்பி னோடே
பிணைத்திடும் தூயோன் ஆவான்!''

தோள்களில் புரளும் மாலை;
சூழ்ந்திடும் 'காக்காய்க் கூச்சல்'
ஆள்க்கட்டு மட்டும் வைத்தே
'ஆற்றலை அளப்போர்' எல்லாம்
தாள்பிடிக்கும் கும்ப லாவார்!
தரமான விமர்ச னத்தில்
'தேள்க்கொட்டும்' இருக்க வேண்டும்!
'தேன் சொட்டும்' இனிக்க வேண்டும்!

"தரம், குறை ஆயும் ஆய்வுத்
தன்மைதான் என்பால் இன்றேல்
வெறும்பாழே நான்தான்!" என்றே
விளம்புமோர் 'ஒதல் லோ' வின்
குரலினில் தன்னை வைத்தே,
குணம்குறை காணும் களையின்
உரத்தினை, தேவை தன்னை
உணர்த்தினான் ஷேக்ஸ்பி யர்தான்!

'நெய்யூற்றி விருந்து வைத்தார்;
நெருங்கியவர்' என்ப தற்காய்
பொய்சூட்டி விமர்ச னத்தைப்
புகழ்வர்ண விளம்பரத்தின்
தொய்நிலைக்கே இறங்கி வைத்தல்
துரோகமே அன்றோ? - பணியைச்
செய்கின்ற விமர்சக னுக்கே
செவியில்லை; விழியு மில்லை!





இன்றைய கவிதை, தோழில்நுட்ப அறிவியல் கோண்டு வந்து திணித்த ஒரு தனிமைக்கு இரையாகிவிட்ட பின்னணியில் தனிமனித வாழ்க்கைக்கு எந்த அளவுக்கு முக்கியத்துவம் ஏற்படுகிறதோ அதே அளவுக்கு, மனிதனின் கூட்டு வாழ்க்கைக்கான முக்கியத்துவத்தையும் உடன் பகிர்ந்து கோள்ளத்தயாராக இருக்கிற, வயலூர் சண்முகத்தின் கவிதைகள் நம்பிக்கையின் பிராணவாயுவை ஆகாயம் முழுவதும் நிறைத்து விடுகின்றன. அக உலகம் சார்ந்த அனுபவங்கள், புற உலகம் சார்ந்த விழுமியங்களால் பாதிக்கப்படுகிறபோது, வயலூர் சண்முகத்தின் மோழி வேளிப்பாடு ஒரு திடவடிவச் சிற்பமாக உருக்கோண்டு விடுகிறது.

- விமர்சகர் இந்திரன்